நான் எனது என்ற அபிமானம்தான் அக்ஞானம். அதுதான் அவித்யை. அதுதான் பரிபூரணமான நம்மை ஜீவத்தன்மையில் ஒடுக்கி சீரழிவு செய்கிறது. இதை துலைக்க வழியுடன் முயற்சிக்க வேண்டும். (13)

அந்த அவித்யையும் முக்குண வடிவமான மாயாசக்தியின் அம்சமாகிருள். (14)

ஜகத், ஜீவன், ஈசுவரன் முதலிய சர்வபேதங்களேயும் அம் மஹாமாயை அழகாய் செய்கிருள். (15)

அம் மாயையை நிரூபணம் செய்யமுடியாது, உண்மையாய் சோதனே செய்தால் பொய்யாகிருள்; இதுதான் மாயாலக்ஷணம்(16)

இவ்வித மாயை தன்னேடு இந்த யாவற்றையும் ப்ரஹ்மத்தி னிடமே ப்ரஹ்ம சந்நிதான மஹிமையால் கல்பனே செய்நு ஆனந்த மடைகிருள். (17)

அக்னியில் தாகாதிசக்தி பின்னுபின்னமாய் சொல்லப்படுவது போல் இம்மாயையை ப்ரஹ்மத்தினிடம் சொல்லலாமெனில் முக் காலத்திலும் இல்லாததை, இப்போது இருக்கிறது, அப்போது இல்லே; அப்போது இருந்தது, இப்போது இல்லே; என்று வ்யஹ ரிக்க பொருந்தாது, நிலேக்காது. (18)

ஆனதால் இத்தன்மைபொருந்திய, வேத வசனங்களால் தெரி விக்கப்பட்ட மாயையாகிற அந்தப்ரம்ம சக்தி, அநிர்வசநீயா அதா வது இன்னது என்று சொல்லப்படமுடியாதவள். (19)

செய்ய முடியாத கார்யங்களேச் செய்வதில் அவ்வளவு சாமர்த் தியமுள்ளவள். இவளது மஹிமை சொல்லத்தரமன்று. (20)

நான் எனது என்ற அபிமானம் உள்ளவரை (த்ரிபுடீ உண்டு) த்வைத பாவம் தான். (21)

அந்தக்காலத்தில் எங்கும் பூர்ணமான அரூபமான ஆகாசம் ஜலத்தில் ப்ரதிபலித்திருப்பதுபோல் எங்கும் பரிபூர்ணமான ப்ரஹ்மம் தனது மஹிமாசக்தியில் ப்ரதிபலித்திருக்கிறது. அவர் தான் சர்வேசுவரன். சர்வகாரணரும் அவரே. பக்தியுடன் வழியாய் அவரை உபாசித்தால்தான் நாம் விடுபடமுடியும் என்று வேதமாதா உத்கோஷிக்கிருள். ஆதலால் அவரை எப்போதும் ஸ்வோசிதமாய் த்யானம் செய்து கொண்டிருப்போம். இவ்வித கௌணமான ஆஸ்திக்யத்தால்தான் முன்சொன்ன உத்தம ஆஸ்திக்யம் ஸ்வாநுபூதியில் உண்டாகும். (22)

சர்வ காரணமூர்த்தியான சர்வேசனது மஹிமையை தேவர்களாலும் அறியமுடியாது. (23)

மாயாசபளித ப்ரஹ்மத்தின் திருவிளையாடல் மஹிமையை அந்த தேவர்கள் பூர்ணமாய் அறியமுடியாவிடினும் சர்வோத்கிருஷ்டமாய் ப்ரகாசிக்கிருர்கள். அவித்யைக்கு வசப்பட்டவர்களில்லையல்லவா? ஸ்வாத்ம விபூதியை பரமேசுவரரது அனுக்ரஹத்தால் அடைந்து ஆதிகார்ய பதவியில் ப்ரகாசிக்கிறவர்களல்லவா? (24)

ஆனதால் அவர்கள்போல் நாமும் ப்ரகாசிக்கத்வைதகாலத்தில் தம் தமது உத்தம வழிகளில் அவசியம் இருந்தாகவேண்டும் (25)

சர்வ லோகங்களின் க்ஷேமத்தைக்குறித்து மனிதவர்க்கத்தை ஸ்ருஷ்டித்திருக்கிருர். (26)

ஆனதால் மனிதவர்க்கத்தைக் குறித்துமட்டிலும் காலதேசாதிகளையனுசரித்தும் அதிகாரி பேதங்களையனுசரித்தும் அந்தந்த வரம்புகளுடன் கூடிய குல தர்மாசாராதி சகல விசேஷங்களும் சர்வேசனுல் அநாதி காலமாகவே ஆக்ஞாபிக்கப்பட்டு ப்ரகாசிக்கின்றன. (27)

சுருதிசம்மதமான மார்க்கங்கள் ஞானபதவியில் சீக்ரம் சேர்ப்பிவிக்கின்றன; மற்றவை காலக்ரமமாய் சேர்ப்பிவிக்கின்றன. (28)

சுருதி தர்மங்களின் நிலைக்காக புண்ய பூமியாம் இப்பரத பூமி அநாதிகாலமாய் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. (29)

அதுபோல் மற்ற ஜாதி மத குல தர்மங்களுக்காக அததற்கு தகுதியான ப்ரதேசங்களுமிருக்கின்றன. (30)

ஆனதால் யாவரும் தம் தமது ப்ரதேசங்களில் பூர்ண கலையுடன் வ்ருத்தியடையட்டும். (31)

மற்றப்ரதேசங்களில் அதற்கு சொந்தமான மத தர்மங்களுக்கு விரோதமன்னியில் யோக்யமா யிருக்கட்டும், இது தான்நியாயம் (32)

லௌகிகமான கார்யங்களில் எங்கும் யாவரும் சமமாய் தர்ம நீதி வரம்புகளுக்குக் கட்டுப்பட்டு ப்ரகாசிக்கலாம், இது தான் லோக மர்யாதை. (33)

இப் புண்யபூமியில் எவர்கள், சுருதி தர்மங்களுக்கு எப்போது கலக்கம் செய்கிறார்களோ, உடனேயே அவர்கள் யாராயினும் சரி கீழ் நோக்குகிறார்கள், இது உலகானுபவம் தான். (34)

சுருதி சம்மதமான வர்ணாச்ரம தர்மமாகிற சநாதன மதமல்லவா முதன்மையானது, அழிவில்லாதது, சர்வத்திற்கும் காரணமானது. ஆதலால் எவ்வாற்றாலும் கேடு நினைக்கக்கூடாது. (35)

இவ்வுலகில் எவன் எந்த கர்மத்தைச்செய்கிறானோ, அதன் ப்ரயோஜனம் உடனேயோ, காலாந்தரத்திலோ, ஜந்மாந்தரத்திலோ அவனால் அவசியம் அடையப்படுகிறது. (36)

பிறந்த குழந்தை முன் வாசனையால்தான் சவைத்து உறிஞ்சி ஸ்தன்யத்தை குடிக்கிறது; ஆதலால் ஜந்மாந்திரம் உண்டு. (37)

ஆனதால் இந்த ஜன்மத்தில் ஏற்ற தாழ்வு, சுகதுக்கம் முதலியன முன்வினையை அனுசரித்து ஏற்படுகின்றன என்று சமாதானம் செய்துகொண்டு த்வேஷாதிகளன்னியில் ஸ்வதர்மத்தை இவ்வுலகம் செய்யட்டும். (38)

அவ்விதமே பிறதூஷணையை விலக்கி சகோதர புத்தியுடன் ஸ்வதர்மத்தைச் செய்யட்டும். (39)

இவ்விதமே ஸ்வதர்மோக்தமான விலக்கமுடியாத ஹிம்சா கார்யத்தை அஹிம்சா கார்யமாய் நம்பி அவசியம் செய்யவேண்டும். இவ்வித கார்யம் பெரியோர்களால் நிந்திக்கப்படவில்லை. (40)

(குறிப்பு:- பரிபூர்ணமான அஹிம்சை, ஞானநிலை, அந்த நிலையடைய ஸ்வதர்மம் செய்தாகவேண்டும். ப்ரவிருத்தி தர்மத்தில் பரிபூர்ண அஹிம்சையைஎவ்விதம்அனுஷ்டித்தல் முடியும், வீண்பிதற்றல் உதவாது, திருத்தப்படமுடியாத அதார்மிகர்களேயும், ஒழுங்கான ராஜரீகத்துக்குக் கேடு நினைப்பவர்களையும், திருடர்களையும், கொலைபாதகர்களையும், ஈதிபாதைகளை விளைவிக்கும் துஷ்ட ஜந்துக்களையும், ப்ராணிகளையும் அதததற்குத் தகுந்தபடி அரசர்கள் தண்டனை செய்யாமல் எவ்விதம் ராஜரீகம் செய்யமுடியும்? வ்யாதி வெக்கைகளுக்கு சிகித்சை செய்யாமல் எவ்விதம் ஸ்வஸ்தமடையமுடியும்? குழந்தைகளை அறட்டாமல் எவ்விதம் முன்னுக்கு கொண்டுவரமுடியும்? இவையெல்லாம் ஹிம்சா கார்யமில்லையா? அதுபோல், நமது சிற்றறிவிற்கு அந்த சமயம் ஏற்காதபோனாலும் ப்ரயோஜன காலத்தில் உலகிற்கே நன்மையாவதால் ஸ்வாசார ரீதியில் செய்யப்படும் யாகம் முதலியவைகளில் செய்யப்படுகிறஹிம்சா கார்யங்கள் அவச்யமானவையே, அவை அஹிம்சா தர்மமே.)

ஸ்வாசாரரக்ஷணத்திற்கு உயிரையும் தியாகம்செய்யும் வைராக்யம் வழியாய் ஏற்படவேண்டும். (41)

(குறிப்பு:—அவ்வித குடிலமான காலங்களில் ப்ராஹ்மணர்கள் ராஜாங்கத்தினிடம் சாந்தமாய் தெரிவித்துக் கொள்ளவேண்டும். தர்மத்தை ஆக்ஞையிட்ட ஈசனும் மாற்றமுடியாது. நித்திய நைமித்திகங்களை குறைக்கவும் மூடியாது. சரீர யாத்ரா சம்பந்தமாக மட்டில் த்ரவ்ய சம்பாதனமோ, ஆஹாரார்திகளை சம்பாதிப்பதோ, ஆபத் தர்மத்தை அனுசரித்து செய்துகொள்ளலாம். சீர்

பட்ட காலத்தில் ப்ராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டும், யாவருக்கும் அசாஸ்திரீயமான கார்யங்களில் பயம் அவசியம் வேண்டும். தங்களுக்கு முடியாத நற்காரியங்களிலும் நடத்திய கெட்ட கார்யங்களிலும், பச்சாத்தாபம்வேண்டும். அநுஷ்டித்தாகவேண்டியவைகளை ப்ராணனையும் லக்ஷ்யம் செய்யாமல் செய்தாக வேண்டும். மனுஷ்ய சக்தியால் சீர்படமுடியாமல், அவ்வளவு குடிலமாக உலகம் தபித்தால் யாவரும் யோக்யமாய் ஒன்றுபட்டு தர்மாபிமானமுள்ள சக்தர்களும் யோக்யர்களும் பெரியோர்களும் கலந்து சாஸ்திரீயமாய் யோசித்து பெரியோர்கள் சொல்படி பிராஹ்மணர்களின் மூலம் சாந்திக பௌஷ்டிகமான கர்ம கலாபங்கள் நடத்தச்செய்ய வேண்டும். அவ்விதமே பெரியோர்கள் சொல்படி ராஜத்வேஷமன்னியில் நடந்து எதிரிகளை, அதாவது தர்ம சத்ருக்களை வைராக்யத்துடன் சக்தியானுசாரம் ஒன்றுபட்டு எதிர்க்க வேண்டியதுதான், தர்மரக்ஷணைக்குவீரத்தனம், அழகுதான். ஆயினும் எந்த சமயமும் சாந்த நிலையை மறக்கக்கூடாது. அதுதான் நல்வழி காட்டும். ஜயம் ஏற்படும். தர்மம் அழிக்கப்பட முடியாதது. கொஞ்சம் வாட்டம் வரினும் சர்வேசன் தன் வாக்யப்படி ஜாக்ரதையாயிருக்கிறார் என்பதை குடிலகாலத்தவர்கள் அறியட்டும். (41)

தன் மதத்தின் ஜனவிருத்திக்காக மற்றவர்களை எவ்வாற்றாலும் இழுத்துக்கொள்வது மிகமிக ஆபாசமானது. ஆள் கூட்டத்தில் ஒன்றுமில்லை. தனது யோக்யமான ஆசாரத்தில் ஒரு தனி மனிதன் இருந்தாலும், இவ்வுலகம் அவனுக்கு அடங்கும். விபரீதம் செய்தால் சர்வேசனதுகோபத்திற்குத்தான் அதுகாரணமாகும். (42)

எவ்வாற்றாலோ அந்ய மதத்தில் சேர்ந்தவர்களுக்கு தனது பூர்வ மதத்தில் அத்யந்தம் ப்ரீதியேற்பட்டால் மட்டில் ப்ராயச்சித்தம் செய்துகொண்டு ஸ்வபூர்வ மதத்திற்குத் திரும்பலாம். (43)

ஆனால் அததற்கேற்பட்ட காலாவதி மீறினதாயிருந்தால் விஷயாதிகளில் பற்றற்றவனாய் வைராக்ய சம்பத்தை வ்ருத்திசெய்து கொண்டு தர்மநீதி தவராத லோகோபகாரியாய் யோகிகள்போல் தனிவாசம் செய்வதுதான் அவனுக்கும் உலகிற்கும் நலமானது(44)

இவ்வரம்பை மீறி சமபந்திபோஜனம், விவாஹம் முதலியவைகளில் பற்றுக்கொண்டு நடத்துவனேயாகில் அவன்மூலம் குலாசார தர்மங்கள் தான் கேடடையும். அவனுக்கு யாதொரு கதியும் கிடையாது. (45, 46)

ஒவ்வொரு புண்யாத்மாவும் க்ரமமாய் புண்யபூமியில் சுருதி மதத்தில் பிறப்படைகிருன். (47)

மூன்று காலத்திய மதங்களுக்கும் சுருதியல்லவா மூலப்ரமாணம். லோக ஸ்ருஷ்டிக்கு முன்னதாகவே சகல சமாசாரங்களேயும் அடக்கிக்கொண்டு, வேதமாதா சப்தரூபமாய் வெளிவந்திருக்கிருள், ஆதலால் வேதமாதாதான் சர்வப்ரமாணமானவள். (48, 49)

அவ்வித மஹிமைதங்கிய சுருதியிலிருந்துதான் காலதேசாதிகளேயனுசரித்து, சுருதி மதங்களுக்கு குந்தகமன்னியில் அந்தந்த ஜன சமுதாயங்களேஒதுக்கி, அணிவகுத்து, அததற்குத்தகுதியான சட்ட திட்டங்கள், அந்தந்த ஜாதி மத ப்ரவர்த்தகர்களால் முக்காலங்களிலும் ஏற்படுத்தப்பட்டன, ஏற்படுத்தப்படுகின்றன. (50)

ஆனதால் வேதமாதா முடிவற்றவள். சர்வேசனது முககமலத்திலிருந்து வந்தவள். அபௌருஷேயா என்ற கீர்த்திவாய்ந்தவள் இவ்வாற்ருல் சர்வ ஜகன்மாதாவாகிருள். மாதிரு துரோஹம் கூடாது. பூஜிக்கத்தகுந்தவள். (51, 52, 53)

அவ்வித மஹிமை தங்கிய வேதம் அதன் வழியான சர்வ வித்யா தேவிகளும்; சர்வத்ர சமமாளுலும் அதிலும் த்ரைவர்ணிகர்களுக்கு அவசியமாளுலும் அவைகளே ப்ரவசனம்செய்கிற விஷயத்திலும் லோக க்ஷேமார்த்தமான ஜப பாராயண விஷயத்திலும் அநாதி காலமாகவே ப்ராஹ்மண வர்க்கத்திற்குத்தான் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

(குறிப்பு:—இக்கலியில் யுக தர்மத்தை அனுசரித்து ப்ராஹ்மணேதரர்கள் வேதம் அதன் சாக்ஷாத் வ்யாக்யான பூதங்களான மீமாம்சா சாஸ்திரம், தர்ம சாஸ்திரம், ஞான சாஸ்திரம் முதலிய

சர்வ ஜகத்திற்கும் ஆவச்யகமான க்ஷேமத்திற்கு காரணங்களான உத்கிரந்தங்கள் தவிர மற்ற சாஸ்திரங்களை தெரிந்துகொள்ளலா மாயினும் அந்தந்த இடங்களில் வருகிற மேற்கண்ட வேதாதி வாக் யங்களை மனதால் பார்க்கலாம். வாகிந்திரியத்தால் உச்சரிப்பது தர்மமாகாது. இவ்விதமே சிற்சில உத்தம கர்ம விசேஷங்களையும் ப்ராஹ்மணேதரர்கள் அனுஷ்டிப்பது கூடாது. ஈசுவரனது அணி வகுப்பை தகர்ப்பது தர்மமா? ஒவ்வொரு செய்கைக்கும் ஓர் அதபுத சக்தி யிருக்கிறது. வழியுடன் ஆசரித்தால் அந்த சக்தி உலகிற்கு உபகாரமாகும். மாறுபடின் விபரீதமாகும். பாஷாந் திரங்களில் மொழிபெயர்த்து பாராயணாதிகள் செய்தால் என்ன யென்று கேட்பதும் உசிதமாகாது. மொழி பெயர்க்கும் ச்ரமத் தில் நமது முன்னோர்கள் நம்மை வைக்கவில்லை அவ்வித உத்தம கிரந்தங்களின் தத்வங்களை சாரமாய் எடுத்து அந்தந்த பாஷைக ளில் எவ்வளவோ நல்ல கிரந்தங்கள் செய்து அருள்புரிந்திருக்கிறார் கள். ஓழிந்த சமயங்களில் அவைகளை படனம் செய்யட்டும் க்ரமமாய் முன்னேறலாம். சர்வேசனது ராஜாங்க பாஷை சம்ஸ் கிருதம், மற்ற பாஷைகளும் ஈசனால் ஏற்படுத்தப்பட்டவைதான், ஆயினும் அவருக்கு ப்ரீதிகரமான அவ்வித கார்யங்களை செய்கிற சமயம் ப்ராஹ்மணர்கள் மூலம்தான் செய்யவேண்டும். மற்றவர் கள் ஊடாடுவது கூடாது. ஒவ்வொரு ஜாதி மத தர்மமும் சர்வேச னது ஒவ்வொரு டிபார்ட்மெண்டு, அந்தந்த டிபார்ட்மெண்டுக்குத் தக்கபடி தெய்வாதிகாரிகளை நியமித்திருக்கிறார். அந்தந்த வழி யாய் அந்தந்த தேவதா ப்ரசாதத்தின் மூலம சர்வேசனது அருளை அடையலாம். இதை அறியாது ப்ரஹ்ம நிந்தை செய்யலாமா? தர்மமாகுமா? (54)

அந்தந்தக் கார்யம் அதற்குத் தகுதியானவனிடம் ஒப்புவிக் கப்பட்டால் மேன்மை அடைகிறது. பிரயோஜனமாகிறது. (55)

இதை அனுசரித்து மேற்கண்ட கார்யங்கள் நடைபெற உல கினர் புருஷார்த்தமடைய ப்ராஹ்மண வர்க்கம் ஏற்படுத்தப்பட் டிருக்கிறது. (56)

சர்வ காரண கர்த்தாவான சர்வேசனது முகம் ப்ராஹ்மண வர்க்கம் ஆனதால் சர்வேசனது முக்ய டிபார்ட்மெண்டு அதில் ஊடாடுவது தகாது. (57)

ஆனதால் மற்ற மத ப்ரவர்த்தர்களால் தங்களுக்கு சம்ஸ்கிருதத்தில் பற்றிருந்த போதிலும் சுருதியிலிருந்து தங்களுக்கு வேண்டியதை எடுத்துக்கொண்டபோதிலும் ஸ்வஜனபாஷானுசாரமாய் அந்தந்த மத கிரந்தங்கள் செய்யப்பட்டன. (58)

உலகம் குணமயமானது ஆனதால் சாதுவர்ண்யமும் சகல ஜாதிகளும் அத்தற்குத்தகுந்த குண அஸ்திவாரத்துடனும் ஆசாராதி தர்மகர்மாக்களுடனும் அநாதிகாலமாகவே பாகுபடுத்தப்பட்டு ஏற்படுத்தப்பட்டன.

குறிப்பு:- ஜாதி பிறப்பினல் கிடையாது என்றும் அது பிசகு என்றும் இன்னும் பலான வீண்வாசா வேதாந்தம் பேசியும் ஜாதி அணிவகுப்புகள் இடை இடையே வந்தன என்றும் தவிர சுருதியில் ஆதாரமே கிடையாதென்றும் வீண் வாதம்புரிந்து ஜகத்தை அழிக்கப் புறப்படுகிறவர்கள் எதையும்பேசுவார்கள், செய்வார்கள். அந்த நாசகரமான பாதையில் உலகினர் நடக்காமலிருக்க கொஞ்சம் சாஸ்திரீயமாய் தெரிவித்துக்கொள்ளப்படுகிறது. அநாதிகாலமாகவே மனுஷ்யவர்க்கம் நான்கு பிரிவு வர்க்கமுள்ளது, ஐந்தாவது வர்க்கம் கிடையாது. சாதுர்வர்ண்யம் ஒன்று, அனுலோமவர்கம் இரண்டு, ப்ரதிலோமவர்கம் மூன்று, பாஹ்யவர்கம் நான்கு, ரஜோகுண தமோகுண லேசசம்பந்தமான சத்வகுணம் சாதுர்வர்ண்யத்தின் அஸ்திவாரம், சரிபாதி ரஜோகுணமும் லேசதமோகுணமும் சம்பந்தமான சத்வகுணம் அனுலோமத்தின் அஸ்திவாரம், சரிபாதி தமோகுணமும் லேசரஜோகுணமும் சம்பந்தமான சத்வகுணம் ப்ரதிலோமஜாதியின் அஸ்திவாரம் சரிபாதி தமோகுணமும் கால் பாகம் ரஜோகுணமும் சம்மந்தமான சத்வகுணம் பாஹ்யவர்க்கத்தின் அஸ்திவாரம், இவற்றில் சாதுர்வர்ணத்தவர்களும் அனுலோமவர்க்கத்தினரும் சேர்ந்து சவர்ணர்களென்றும் சநாதனிகளென்றும் வைதிகர்களென்றும் அநாதிகாலமாகவே அழைக்கப்படுகிறார்

கள். ப்ரதிலோமத்தவர்களும், பாஹ்யர்களும் அவர்ணர்களாகவும் அவைதிகர்களாகவும் அழைக்கப்படுகிறார்கள். சநாதனிகளாகமாட்டார்கள். இவ்விதமிருக்க சநாதனிகளது கார்யங்களிலும் அவர்களது ஆலயாதிகளிலும் மற்றவர்களுக்கு சம்பந்தம் எப்படி வரும் பாஹ்யர்கள் விஷயமாய் செய்கிற தாக்ஷிண்யத்தை ப்ரதிலோமத்திற் சிற்சில பிரிவினர்களிடம் ஏன் காட்டக்கூடாது என்று கலஹகரமான வாதம் கிழப்புவது ந்யாயமில்லை. ஏனெனில் ப்ரதிலோம வர்க்கத்தின் தீண்டத்தகாத சிற்சில பிரிவினர்களும் பொதுவாக அந்த வர்க்கத்தினர் யாவரும் சநாதன தர்மத்தை கௌரவிக்கிறவர்கள் அதில் பிறப்படைய ஆவலுள்ளவர்கள் ஆதலால் தங்களது தொழில்களின் மூலம் சநாதநத்தவருக்கு உபகரித்து சநாதன தர்மபக்தர்களாகிறார்கள் இவ்வாற்றால் அவர்களது முறைப்படி தீண்டத்தகாத ஜாதியினர்கள் சநாதன தர்மத்தவர்களோடு பழகினால் அவர்களுக்கும் சீக்ரம் நந்தனார் முதலியவர்களுக்கு ஏற்பட்டதுபோல் ஈஶ்வரானுக்ரஹம் ஏற்படுமென்றும் சநாதன தர்மாசாரங்களுக்கும் கலக்கம் வரவேண்டாமென்றும் அவர்களிடம் கருணையுடன் கண்டிப்பாய் விதி விலக்குகள் அநாதிகாலமாகவே இருக்கின்றன. தவிர பிறப்பால் பிரதிமலோமத்தவர்களோடு செயற்கையால் ஏற்பட்டவர்களும் கர்மப்ரஷ்டர்களும் மிக மிக வ்ராத்யர்களும் ஒதுக்கப்பட்டு கலந்துவிட்டார்கள் இவ்வாற்றால் யார் இதற்கு வகைசெய்ய முடியும் பச்சாத்தாபமடைந்த அவர்கள் அவர்களுக்கேற்பட்ட வழியில் யோக்யமாய் நடந்து ஜந்மாந்திரத்திலாவது சநாதனிகளாய் பிறந்து மேன்மையடைய யத்னம் செய்யட்டும் முறைபாய் சநாதனிகளும் உபகாரம் செய்யவேண்டியதுதான் இதையெல்லாம் கவனியாது அக்ரமவாதம் புறிந்தால் ந்யாயமாகாது. தவிர பாஹ்யர்கள் நமது விஷயங்களில் ஊடாட வருகிறார்களில்லை நம்மை கௌரவிக்கவோ அல்லது உதாசீனமாய் வேடிக்கை பார்க்கவோ வருகிறார்கள். அவர்களை நம்முடையவழியாய் எவ்விதம் மர்யாதை செய்யவேண்டுமோ அவ்விதம் செய்வது குறைவாகாது ப்ரதிலோமவர்க்கத்தினரை அவமானம் செய்தது மாகாது வீண்வாதம் வேண்டாம். பயமுறுத்தலும், சநாதன தர்மத்தில் நடக்காது தவிர ஜாதிகள் விஷயமாய் ப்ரமாணமும் கிடையாது. அந்த வாக்யங்களுக்கு இந்த அர்த்தம்

சரிப்படாது என்று உளருகிறார்கள். வாக்யங்களுக்கு முன் பின் தொடர்ச்சியுடனும் மற்றும் சாஸ்திரீய ந்யாயங்களுடனும் அர்த்தம் செய்யவேண்டும் மனுஸ்மிருதியில் ஐந்தாவது வர்ணம் கிடையாது என்று சொல்லியிருக்கிறதே தவிர ஐந்தாவது ஜாதி கிடையாது என்று சொல்லவில்லை. அனுலோமத்தவர்களை நான்கு வர்ணத்தில் அடக்கி ப்ரதிலோமத்தினரையும பாஹ்யத்தினரையும் ஐந்தாவது ஜாதியிலும் அடக்கி மனுவ்யவஹரித்து பாஹ்யர்களைப் பற்றி அவ்வளவு ஆவசியகமில்லாததால் அவர்கள் விஷயமாய் அதிகம் சொல்லாமல், வர்ண தர்மத்தில் அடங்கின, அனுலோமத்துடன் கூடிய, நான்கு முக்ய ஜாதிகளுக்கும்: இவ்வுத்தமப் பிறவிக்கு ஆசையுள்ள ப்ரதிலோமவர்க்கத்தினராகிய ஐந்தாவது ஜாதிக்கும் சுருதிவழியாய் சட்டதிட்டங்களை சொல்லியிருக்கிறார் பாஹ்ய வர்கத்தினராகிய ஐந்தாவது ஜாதிக்கு இல்லை இதை அறியாது கண்டபடி ஊளையிடலாமா? தவிர புருஷ சூக்தம் க்ருதகமாம்: இவர்களுடன் யார் வ்யவஹாரம் பேசுவது வேதபாகத்தை பூரணமாய் கரைகண்டவர்கள் போல் பிதற்றுகிறார்கள்: ஆயிரம் இடத்தில் ச்ருஷ்டி ப்ரகரணங்கள் வருகின்றன. அவ்வளவையும் இவர்கள் க்ருதகமாக ஏன் சொல்லவில்லையோ: தவிர சில இடங்களில் சிற்சில ஜாதி கல்பனைகளை விட்டிருக்கலாம் சிற்சில இடங்களில் ஆசார தர்மகர்மாக்களின் மூலம் ஜாதிகளை சொல்லியிருக்கிறது: இவ்வாற்றால் வேதத்தால் ஏற்பட்டது தான் ஜாதி வ்யவஸ்தை என்பதை மறக்கவேண்டாம்: கீதையிலும், ஞானிகள் சகலமான க்ஷுத்ரஜந்துக்களிடமும் உயர்ந்த ப்ராணிகளிடமும் ச்வபாகர்களிடமும் பிராம்மணனிடத்தும் தனது ஆத்மஸ்வரூபத்தை பார்க்கிறார்கள் என்றதால் ஜாதிவ்யவஸ்தையை ஒப்புக்கொண்டு ஞானியின் நிலையை ஸ்தோத்ரம் செய்திருக்கிறாரே தவிர பகவான் ஜாதிவ்யவஸ்தையை த்வம்சம் செய்யக்கிடையாது. அர்ஜுனனுக்கு ஞான உபதேசத்தை செய்து உன் கடமைப்படி வில், எடு, ஹதம் செய் என்று தான் சொன்னாரே தவிர வேறில்லை தவிர அனுலோம பரதிலோம விஷயமாய்கேள்க்கிறவனுக்கு அவன் புத்தியாய் அதிலிருந்து இது இதிலிருந்து அது என்று அர்த்த வாதமாய் சொல்லியிருக்கிறதே தவிர உள்ளபடி சகல ஜாதிகள் விஷயமாய் சாஸ்திரீயமாய் யோசனை செய்தால்தான் பிறப்பினால்

என்றது புரியும் வஜ்ரா சூசிகோபனிஷத்திலும் அசட்டு அர்த்தம் பண்ணுகிறார்கள். தேவர்கள்போல் மஹரிஷிகளும் காலம்கண்டுபிடிக்கப்படமுடியாதவர்கள் சர்வ மஹிமை பொருந்தியவர்கள். சிருஷ்டி கர்த்தாவின் மானச புத்ரர்கள். அவ்வித மஹரிஷிகள் தங்களது மஹிமைபால் தங்களை சிற்சில ஆவச்யக கார்யங்களை உத்தேசித்து, அநேக ப்ரகாரமாய் அநேகம் இடங்களிலிருந்து உண்டானதுபோல் காட்டிக்கொள்வார்கள். என்பதையும் ஜாதிவ்யவஸ்தையை ஸ்திரப்படுத்தியும் இதுகளையெல்லாம் ஒப்புக்கொண்டுதான்; கேள்வி கேட்பதின்மூலம் பிரம்ம நிஷ்டநிலையை உயர்த்திச் சொல்லி நிவிருத்தி மார்க்கத்திற்கு அதிகாரமுள்ளவர்களுக்கு ப்ரவிருத்தி மார்க்கத்தில் ப்ரமம் வராது கருணைபுரிய உத்கோஷித்திருப்பதை இந்தக் கசடர்கள் எவ்விதம்? அறிவார்கள்: இன்னும் இந்த கர்ணாடக வழியால் சநாதனமதத்தினர் நாளுக்குநாள் குறைவடைகிறார்கள். வ்யவஸ்தைகளை ஒதுக்கிவிட்டு ஒற்றுமையடைந்தால்தான் பலம் பெறலாம் மற்றவர் ஹத்தாய் இருப்பார்கள் என்று அசட்டுக் கண்ணீரோ, நீலிக்கண்ணீரோ விட்டு, ஓலமிடுகிறார்கள்: யோக்யமான ஒரு சநாதனியிருக்கும்வரை சநாதனிகளை அக்ரமமாய் பூர்ணமாய் வ்யாபிக்க எந்த அசுரர்களாலும் முடியது: ஒற்றுமை என்பது வரம்புடன் கூடிய மன ஒற்றுமையே தவிர மற்றது ஆபாசமானது: ஆஹாரவ்யவகாரங்கள் ஒன்றாயுள்ள குடும்பத்தில் ஜாதியில் கலகம் ஏற்படுகிறதில்லையா? தவிர ப்ரபுகக்ஷி, ஏழைகக்ஷி, தொழிலாளர்கக்ஷி, உத்யோககக்ஷி, அல்லாதார்கக்ஷி, சமதர்மகக்ஷி, பொதுஉடமைகக்ஷி, கருப்புக்கக்ஷி, வெள்ளைக்கக்ஷி, செஞ்சட்டையினர்கக்ஷி, ஜயிலர்கக்ஷி, காங்கிரச்கக்ஷி, மிதவாதகக்ஷி, உக்ரகக்ஷி, எத்தனைகக்ஷி அததற்கு எத்தனைவிதமான ஆபாச வரம்புகள்: என்ன என்ன ஆபாசப்பிரிவுகள். இதுகள் உலகிற்கு வேண்டுமாம், அநாதி சித்தமான அருமையான மன ஒற்றுமையுடன் வாழ சௌகர்யமுள்ள ஈசுவர கல்பித ஜாதிமுறை பிசகாகிறதாம் இது என்ன இது அழியவேண்டியவை தானே அழியும் நமக்கு என்ன கவலை. (59)

தனது விஷத்தால் பாம்பு கொல்லப்படுகிறதில்லை. அதுபோல் தான் மனிதவர்க்கமும் தன் தர்மத்தால் கொல்லப்படாது. (60)

ராகத்வேஷத்தால் இக்கட்டுகள் உண்டாகின்றன அதை துலைக்கவேண்டும். (61)

மண், பரீக்ஷை செய்கிறவனை தன்னை வாயில்போட்டுக்கொண்டதின் மூலம் கொன்றுவிடாது அதுபோல் விவேகமாய் தன் தர்மத்திலிருப்பவனை அந்த தர்மம் எவ்வளவு அல்பமானாலும் பந்தகப்படுத்தாது அவிவேகமாய் ஊடாடுகிறவனை எவ்வளவு உயர்ந்த தர்மமாயினும் அது அவனை கெடுத்துவிடும். தெரியாக்குழந்தையை மண், தன்னை தின்றதின்மூலம் வ்யாதி உண்டுபண்ணி கஷ்டப்படுத்துகிறதல்லவா, (62)

பக்ஷி விருக்ஷ மிருகாதிகளில் அநேகம் பிறிவு இருப்பதுபோல் மனிதவர்க்கத்திலும் ஏற்பட்டிருக்கிறது. (63)

ப்ரக்ஞையின்மூலம் மனிதவர்கம் உயர்ந்ததாகிறது ப்ரக்ஞையின் தாரதம்யத்தால் அநேகம் பிரிவு ஏற்பட்டிருக்கிறது ஆனதால் பேதம் ஸ்தூலமாய் தெரியவில்லை. (64)

காந்த விளக்கானது பல்புகளின் வேற்றுமையால் சிறிதாயும் பெரியதாயும் அநேக விதமாய் ஆவதுபோல் சரீரத்தில் ரத்தத்தின் சூக்ஷ்மமான வித்யாசத்தால் ப்ரக்ஞை பேதமாகிறது. இதன் மூலம் மனித வர்க்கத்தில் பேதம் உண்மைதான். (65)

ஒரே ஜாதி விருக்ஷத்திலும் ஒரே ஜாதி மிருகத்திலும் உட்பிரிவுஇருப்பதுபோல் சநாதனமதத்தில் உட்பிரிவுகளும்உண்டு. (66)

தாம்ரம் முதலிய பதார்த்தங்களுக்கு புளி முதலியவை சுத்திக்காக ஏற்பட்டிருப்பது போல் ஆசாராதி பேதங்களும் இருக்கின்றன. (67)

அந்தந்த ரச பதார்த்தமானது குணத்தை அனுசரித்து அதற்கு தகுதியான பதார்த்தத்தில் வைக்கப்படுகிறதுபோலும் ஆசாராதி பேதங்கள் வைக்கப்படுகின்றன. (68)

குடும்பத்திலும் பொதுக்கார்யங்களிலும் அணிவகுத்து கார்யம் நடைபெறுகிறது போல் ஆசாராதிகளும் அணிவகுக்கப்பட்டிருக்கின்றன. (69)

எவ்விதம் இந்திரிய சமூகமும் உலகில் யந்திரங்களும், அதன தன் கார்யத்தையே செய்யமுடியுமோ, செய்கின்றனவோ, அது போல் மனிதவர்க்கம் தன் தனது கார்யத்தை செய்யட்டும். (70)

தன் தர்மம் மேலானது என்று பக்தியுடன் செய்யட்டும், வெளிப்பார்வைக்கு அற்பமானாலும் தனது தர்மத்தைச் செய்பவன் உத்தமன், உத்தம ப்ரயோஜனத்தையே அடைகிறான். நாமெல்லோரும் சமமான ஆத்மரசமுள்ளவர்கள், ஆயினும் நாடகபாத்ரன் போல் அமைக்கப்பட்டிருக்கிறோம். ஸ்வதர்மத்திலிருப்பவனையே பகவான் சீக்ரம் காக்கிறார்; மற்றவனை காலாந்தரத்தில் காப்பாற்றுகிறார். (71, 72, 73, 74)

புண்யம், பாபம் நேரில் காணமுடிகிறதா என்று வாதாடுவது பொருந்தாது. சப்தம், நான் இதோ இருக்கிறேன் என்று நம்முன் வருகிறதா, ஆயினும் யந்திரத்தால் கிரஹிக்கப்பட்டதை வெகு காலம் கிரமித்தும் கேட்டனுபவிக்கிறோம், அதுபோல் கர்மவினை பார்க்கப்படமுடியாததாய், அபூர்வதையாய், நம்முடன் சஞ்சரிக்கிறது. சமயத்தில் அதன்பலனை அந்தந்த ஜன்மயந்திரத்தால் அனுபவிக்கச்செய்துவிடுகிறது. சர்வேசனது மஹிமையை யார் அறிய முடியும். (75)

காலபரிணமத்தால் நல்ல வழியாயும் கெட்ட வழியாயும் அநேக ப்ரகாரமாய் சர்வ சமாசாரங்களும் விரிவடைவது உலகின் இயற்கை வினை கோணல் வழியாய் விரிவடைகிற சமயம் அந்தந்த ப்ரவர்த்தகர்கள் சர்வேசனது ஆக்ஞையால் இவ்வுலகில் அவதரித்திருக்கிறார்கள். (76)

அவ்வித மஹான்கள் அவ்வித ஜனங்களை காலதேசாதிகளை அனுசரித்து ஒழுங்குபடுத்தி மூலக்ரந்தங்களுக்கு குந்தகமன்னியில் உபதேசித்து உலகை ஒழுங்கு செய்வார்கள். (77)

அவ்விதம் அவதரிக்கும் மஹான்களுக்கு த்வைத ரீதியில் உள்ளபடி அபிநிவேசம் கிடையாது. ஆயினும் சர்வ ஜனங்களும் அவரவர்களுடைய வழியிலேயே இருக்கவேண்டும் என்பதை சிக்ஷி

ப்பதற்காக அம்மஹான்கள் தாங்கள் ஜனித்த ஜாதீய ஆசாரங்களை யே செய்தார்கள். மனசில் அத்வைத பாவனை கொண்டு செய்கை யில் தன் ஜாதீய ஆசாராதிகளை செய்கிறவன் உத்தமன். அவன் தான் சீக்ரம் ஞானபதவி அடையமுடியும், (78, 79, 80)

சாஸ்திரங்களிலும் பெரியோர்களது க்ரந்தங்களிலும் ஒன்றுக் கொன்று தூஷணையான வாக்யங்கள் காணப்படுகின்றனவே அது சரியாகுமாவெனில் அது தூஷணையாகாது. தாயார் தன்குழந்தை களின் முன்னிலையில் அவர்களது க்ஷேமத்தைக் குறித்து அது பிழிக்கும் இது கசக்கும் என்றது போன்ற தூஷணைகளால் பழம் முதலிய நல்ல பதார்த்தங்களை தூஷிக்கிருள். அது தூஷணை யாகுமா? அதுபோல் தம் தமது மார்கங்களில் அந்தந்த ஜனங்களு க்கு சிரத்தாபக்தி உண்டாக மற்றதை தூஷித்துச் சொல்லியிருக்கி ருர்கள்.

குறிப்பு:—ஒவ்வொரு ப்ரவர்த்தகர்களும் சித்த புருஷர்கள் தங்களது அபூர்வ சித்தி மஹிமைகளை தம் தமது சிஷ்ய மத்தியில் அபூர்வமாய் காண்பித்திருக்கிருர்கள். ராக த்வேஷத்தை முன்னி ட்டு தூஷணை செய்வார்களேயானல் சித்திகள் உள்ளபடி உண்டா காது. இதைத் தெரிந்துகொண்டால் அவர்களது கருணை நன்கு புலப்படும். (81, 82, 83)

இந்த ரகஸ்யமறியாமல் உலகில் வீண்வாதம் புரிகிருர்கள். (84)

ஆத்ம ஞானத்திற்கு த்வைதமான யாதொரு அபேக்ஷையும் கிடையாது. சித்தசுத்தியின் அபேக்ஷமட்டிலும் உண்டு; தன் தர்மத்தை விட்டவனுக்கும் பிற தர்மத்தை கைக்கொண்டவனுக் கும் அதேற்படாது. (85, 86)

ஆனதால் விருப்பு வெறுப்பன்னியில் அததில் அவனவன் இருந்தாகவேண்டும். (87)

நல்ல சஹவாசம், நல்ல ஆஹாரம், நல்ல வித்யை இவைகளால் தான் சித்தசுத்தி த்ருடப்படும், இல்லையேல் மாறுபடும். (88)

ஆஹாரத்தை அனுசரித்து புத்தி சன்மார்க்கத்தில் ப்ரவிருத்திக்கிறது, குணமும் அவ்விதமே உண்டாகிறது. (89)

ஆனதால் தர்மசாதகமான சரீரத்தை துராஹாரம் முதலிய கெட்ட பரிசயம் ஏற்படாமல் காப்பாற்றிக்கொள்ளவேண்டும். (90)

தன தான்யாதி சகல சம்பாதனமும் அத்யந்தம் ஆபத்தாலன்றி தன் தனது தர்மரீதியில் செய்யத்தகுந்தது. (91)

வஸ்திரம், மாவு, எண்ணெ, தான்யாதிகளின் அரிசி, இது முதலிய சிற்சில ஆவச்யக சாமான்கள் கைதொழிலாலேயே உண்டுபண்ணப்பட்டு உபயோகிக்கவேண்டும். (92)

குறிப்பு:—இவ்விதமே சிற்சில குடிசைத்தொழில்களும் கைத்தொழிலாலேயே விருத்தி செய்யப்படவேண்டும். இதை மீறி லக்ஷோபலக்ஷக்கணக்கான அந்தந்த ஜாதிகளுக்கு ஜாதீயத்தொழில் முறையாய் அநாதி காலமாய் அமைக்கப்பட்டு, உலகிற்கு நெருக்கடியன்னியில் குணமாய் நடந்துவருகிற கைத்தொழில்களை, அந்யாய யந்திரத்தின் மூலம் நெருக்கடி செய்யலாமா? இந்த அக்ரமத்தால் கிராமங்களில் பிழைக்கவகையன்னியில் நடைபிணமாய், ஈ, எறும்பு ஒப்பந்தமாக பட்டணங்களில் ஜனங்கள் திணறுகிறார்கள். இவ்வித யந்திரங்களை சூரணம் செய்தாகவேண்டும். இயற்கை சுகானுபவமே பலப்ரதமானது; யந்த்ரோத்பன்ன சுகானுபவமோவெனில் சோனிகளாக்கிவிடும். ஆதலால் அத்யந்தம் ஆவச்யகமான ரயில், தந்தி முதலிய சிற்சில யந்திரங்கள் தவிர, மற்ற யந்திரங்களை பொசுக்கி ஊதியாகவேண்டும்.

மேற்சொன்ன தான்யாதிகள் யந்திரோத்பன்னங்களானால் ஜட வஸ்துக்களின் அதிக சம்பந்தத்தாலும் அததற்காக ஏற்பட்ட ஜாதியினர்களின் கைபடாததாலும் இவ்வாற்றால் சுத்தி ஏற்படாமல் ராக்ஷசத்தன்மை யாவதாலும் சரீர ஜாட்யத்தையும் புத்தி ஜாட்யத்தையும் அவசியம் உண்டுபண்ணிவிடும். (93)

ஏனெனில் அந்தந்த ஜீவசத்தானது யந்திரோஷ்ணத்தால் உறிஞ்சப்பட்டுவிடுகிறது. ஆதலால் அநாவசியமாய், அயோக்ய

மாய் தந்திரமாய் ஜனங்களின் ஜீவநாடியை தர்மத்தை நாசம் செய்கிற யந்திரங்களை ஹதம்செய்தாகவேண்டும். (94, 95)

சித்த புத்தி சரீரங்களுக்கு சுத்தி புஷ்டிகளைக் கொடுக்கக் கூடியது. ஆஹார சஹவாசம்தான்.

குறிப்பு.—அந்தந்த ப்ரதேசங்களுக்குத் தகுந்தாற்போல் அநாதிகாலமாகவே அனுஷ்டிக்கப்பட்டு வருகிற ஆஹார நடை உடை பாவனைகளையே அவரவர்கள் செய்யவேண்டும் யக்ஞாதி உத்தம சமயம் தவிர மாம்ச பக்ஷணம் உதவவே உதவாது. இயற்கைக்கு அதிகமாய் சுருசுருப்பையும் ச்ரம பரிகாரம் செய்வதோடு மந்தத்தையும் செய்கிற மருந்து வகையரு பான பதார்த்தங்களை உபயோகிக்கத்தகுந்தவர்களும் அதிகம் உபயோகித்தல் தகாது. புத்தி மதப்ரதமான துராஹாரங்களையும் மதுபானங்களையும் கட்டோடு வழியாய் விலக்கவேண்டும். யந்திரோத்பன்னம் அவசியம் கூடாது. தான்யாதிகளின் விவரங்களும் இவ்விதம் தெரிந்து கொள்ளவேண்டும். நெல் மூன்று வருஷ சத்துள்ளது. மற்ற தான்யம் $1\frac{1}{2}$ வருஷ சத்துள்ளது. கோதுமை 2 வருஷ சத்துள்ளது. ஆயினும் ஒவ்வொருவனும் கோதுமையை அடிக்கடி சரீரத்தில் சேர்த்துக்கொள்ளவேண்டும். வரகு தான்யம் ஆபத்ரக்ஷகமானது. பாடவமாய் வைத்திருந்தால் பனிரெண்டு வருஷ சத்துள்ளது. நீவார தான்யம் இப்போது அரிது. தான்யாதிகளை அறுவடையாய் 6மீத்துக்குப் பிறகுதான் உபயோகிக்கவேண்டும் அவசியமானால் புளுக்கி உடனேயே உபயோகப்படுத்தலாம். துவரை பாசிப்பயிர்வகையரு பயர்களும $1\frac{1}{2}$ வருஷ சத்துள்ளது. ஆரம்பம் முதலே உபயோகிக்கலாம். ஆனாலும் இவைகளையெல்லாம் சேர்ந்தடியாக குத்தி உடைத்துவைத்துக்கொள்ளல்தகாது. ப்ரதிமாசமும் வேண்டியதை வெய்யவில்காயப்போட்டு குத்தி உடைத்து உபயோகிக்கவேண்டும். நாட்டு வெல்லம் நாட்டு பனவெட்டு நாட்டுப் பழுப்பு சர்க்கரை, நாட்டு பனங்கற்கண்டு, குழவை ஜீனி, சீனக் கற்கண்டு இவைதான ரத்தபுஷ்டிகாமானது மிதமாயும் உபயோகிக்கவேண்டும். அன்ய நாட்டுச் சரக்கு யாதாயினும் அதிகம் உபயோகித்தல் கூடாது. அசாஸ்திரீயமான பதார்த்தச் சேர்க்கை

யால் உண்டுபண்ணப்படுகிற அஷ்டகிராமஜீனி வகையரு உதவாது இவ்வித பதார்த்தம் எலும்பை உறுக்கிவிடும். காரம், பிளிப்பு, உப்பு, கசப்பு வகையரு பதார்த்தங்களை ஜாக்ரதையாக சேர்க்க வேண்டும். சாஸ்திரீயமான காலசாகங்களையும் பழங்களையும் மாவு வகையருக்களையும் மிதமாய் சேர்க்கவேண்டும். நெய், பால், தயிர் அடிக்கடி சக்தியானுசாரம் சேர்த்துக்கொள்ளவேண்டும். சுத்த மான எண்ணைகள்தான் வாங்கி உபயோகிக்கவேண்டும். விளக் கெண்ணை சமயங்களில் சரீரத்தில் சேரவேண்டும். உப்புடன் கூடிய நீர்பெருக்கான மோர் இரண்டு வேளைகளிலும் உபயோகிக்க வேண்டும் தவிர, யோகாப்யாசம் பண்ணுகிறவர்கள் வித்யாப்யாசி கள், சரீரப்பாடு படுகிறவர்கள், தொழிலாளர்கள், வியாதிஸ்தர்கள் வயதானவர்கள், குழந்தைகள், ஞானிகள் இவர்களுக்கு ஸ்நானம் ஆஹாரம் இது விஷயத்தில் கால நியமம் அவ்வளவு அவசியமில்லை. சௌகர்யம்போல் ஸ்நானம், ஆஹாரம் இவைகளை இவர்கள்மட்டி லும் தர்மநியமத்துக்குக் கட்டுப்பட்டு செய்துகொள்ளலாம் ஆயி னும் யாவருமே சந்த்யா வேளைகளிலும் ராத்திரி 12 நாழிகைக்கு மேல்பட்டும் ஆஹாரம் எடுத்துக்கொள்ளவே கூடாது. வியாதிஸ் தர்கள் மருந்துவகையருஎடுத்துக்கொள்வதிலும் குலஆசாராதிகளை அனுசரித்தல் உத்தமம், தவிர காலையில் பஞ்ச பஞ்ச உஷக்காலத் தில் யாவரும் எழுந்திருந்து, சுத்திசெய்து, ஈசனைத்யானித்து ஒரு கை தீர்த்தம் நாபீ கமலத்தில் சேரும்படி ப்ராசனம் செய்வது, மஹாகல்பமாகிறது. ப்ராஹ்மண வர்க்கத்திற்கு அவர்களது ஆசா ரப்படியான ஆசமனீயத்தால் இது கைகூடுகிறது. சூர்ய உதய காலத்தில் முகத்தில் மட்டிலும் சூர்ய வெளிச்சம் படாமல் நின்று பகவானை ப்ரார்த்தித்தால் சர்வ வ்யாதியும் பறக்கும், திவ்ய தேஜசு ஏற்படும். ப்ராஹ்மண வர்க்கத்திற்கு அவர்களது நித்ய ஆசாரத் தால் சுலபமாய் கிடைக்கிறது. இவ்வாற்றால் மேல் சொன்னபடி சரீரத்தை மனசை ஒழுங்குபடுத்திக்கொண்டால் துர் குணங்களும் துர் வ்யாதிகளும் ஏற்படாது. அதிகமென்ன எமனும் கிட்ட நெருங்கான். (96)

சத்சஹவாசத்திலும் சதாஹாரத்திலும் புண்யமிருந்தால்புத்தி ப்ரவிருத்திக்கும். (97)

தீபப்ராகாசத்துக்கு எண்ணெயும் திரியும் முக்யம்போல் மனிதனுக்கு இவ்விரண்டும் முக்யம். (98)

சமுத்ர தாணத்துக்கு கப்பல் அவசியம்போல் சம்சாரத்திலிருந்து ஈடேற இவ்விரண்டும் முக்யம். (99)

ஜல சம்பந்த தீபம் எப்படி நாசமடையுமோ, முதலை மத்தியில் அகப்பட்டவன் எவ்விதம் அழிவனோ, அதுபோல் அசத்சஹவாசம் செய்தவனாகிறான். கெட்ட சஹவாசத்தைக் காட்டிலும் மற்றொரு நரகம் கிடையாது. நல்ல சஹவாசத்தைக் காட்டிலும் மற்றொரு ஸ்வர்க்கமும் கிடையாது. ஆனதால் அழியக்கூடிய தேஹத்தைக் கூட சாஸ்வதமாயெண்ணி, சத் சஹவாசம், சத் வித்யை, சதாஹாரம், சன்மார்க்க வழியான தனதான்யாதி சம்பத்துக்கள் இவைகளை அவசியம் சம்பாதிக்கவேண்டும். (100, 101, 102, 103, 104)

ஆயினும் சரீரம் நீர்க்குமிழி போன்றது என்பதை அவசியம் மறவாமல் பாபங்களின் சாந்திக்காக அதிதிகளுக்கு, அப்பாகதர்களுக்கு, யாசகர்களுக்கு, சந்யாசிகளுக்கு, ப்ரம்மசாரிகளுக்கு, வைராக்ய சம்பன்னர்களாய் தன் குலரீதியாய் வெளியேறிய மற்ற இதர பண்டாரங்கள், பரதேசிகர்கள் இவர்களுக்கு, கூன் குருடு முதலிய அங்கஹீனர்களுக்கு, பிச்சைக்காரர்களுக்கு சாஸ்திர வழியாக தன் குலதர்மத்துக்கு குந்தகமன்னியிலும், வந்தோரின் குலாசாரத்துக்கு குற்றம் வாரமலும், பணம் கொடுப்பதோ, பிச்சையிடுவதோ, பிக்ஷை செய்துவைப்பதோ, அன்னம் கொடுப்பதோ, இவைகளை செய்தல் அவசியம். இவ்விதமே, சாஸ்திரீயமான பொதுக்கார்யங்களுக்கு அதை நிர்வகிக்கக்கூடியவர்களிடம் சக்தியானுசாரம் தர்மம் செய்தலும் அவசியம். இதேபோல் பொதுவான மிக மிக நற்கார்யத்தை தர்ம சொத்தேற்படுத்தி, சாசுவதமாய் நடத்தச்செய்வதும் சக்தியுள்ளவர்களுக்கு அவசியமானது. பசி எடுத்தவன் அன்னத்திற்கு பாத்ரம், அததற்குத் தகுதியான யோக்யதை தான தர்மத்

துக்கு பாத்ரம் என்றிருந்தாலும், வந்தவன் இதற்கு எதிரிடையாக இருப்பினும், வெருங்கையனாக அனுப்புவது நமக்கு உசிதமில்லை என்ற உத்தம எண்ணங்கொண்டு அவனவனது குலகுணாதிகளை அனுசரித்து அன்னம் கொடுக்கவேண்டியது தான். கேட்டதில் ஏதாவது கொஞ்சம் கொடுக்கவேண்டியது தான். ஆனால் பிராஹ் மணோதரர்கள் கையில் பணம் மட்டிலும் பிச்சையாக கொடுக்கக் கூடாது. தவிரினால் அனர்த்தம். அலைக்கழிப்பதும், இல்லை என் பதும், அவமானப்படுத்துவதும் நரகப்ரதமாகிறது. இதே போல் துர்போஜனம் செய்கிறவனும் அதோகதியடைகிறான். (105, 106) 107,

ஆனதால் பெரியோர்கள் தங்களது சித்த சுத்தியில் கருத்துக் கொண்டு மற்ற மதஸ்தர்களிடமும் தமது மதத்தின் உள்ளடங்கிய ஜாதிகளிடமும் அன்னம் எடுத்துக்கொள்ளுகிறதில்லை. மற்றப்படி அவன் நிந்த்யன், கீழானவன் என்ற ஆபாச எண்ணத்தால் அல்ல. ஸ்வஜாதி ஜனமத்தியிலும் எவனது அன்னம் சம்பாதன தோஷத் தாலும் பதார்த்தங்களின் தோஷத்தாலும் தூஷிக்கப்படவில்லையோ அவ் வுத்தமனுடைய அன்னத்தையே எடுத்துக் கொள்வார்கள். அதிலும் சமானர்களோடு தான் எடுத்துக்கொள்வார்கள். தவிர சர்வ தோஷநிவிருத்திக்காக போஜன ஆரம்பத்தில் தம் தமதுகுலா சாரத்தை முன்னிட்டு மந்திர ஜபங்களோ, தேவதா ஸ்மரணமோ செய்துதான் பெரியோர்கள் அன்னம் எடுத்துக் கொள்வார்கள். எவனுக்கு எந்த குணமோ அவனது அன்னத்திற்கு அந்த குணம் தான். அவ்விதமே பார்க்கிறவனுடைய குணாதிகளையும் அன்னம் தன்னிடம் இழுத்துக்கொள்ளுகிறது. அன்ன மஹிமை இவ்விதம் இருக்கிறது. அன்னத்தில் குரூர குணமுள்ளவர்களின் பார்வை சம்பந்தமாய் அநேகம் ரோகங்கள் ஏற்படுவது உலகானுபவமே. (108, 109, 110, 111, 112, 113, 114, 115)

ஏனெனில் சகலமான குணதோஷாதிகளும் அவனவனுடைய பார்வையின் வழியாய் அவனவனோடு சஞ்சரிக்கின்றன. (116)

ஆனதால் அன்னத்தை சர்வேச பிம்பமாய் பாவிக்கவேண்டும். தன்னை தூஷிதமாக்கினவனை அன்னமாதா கெடுத்துவிடுகிறாள்(117

இவ்விதம் அன்ன மஹிமையை அறியாமல் வீண் வாதம் போஜனம் செய்கிறார்கள், அது உதவாது. (118)

இனியாவது சம்பாதனம், சஹவாசம், வித்யை, அன்னமெடுத்துக்கொள்வது, இவைகள் யோக்யமாகட்டும். (119)

அப்போதுதான் ஈசுவரப்ரசாதம் கிடைக்கும். (120)

அப்போதுதான், அதாவது ஆஹாராதி முறை முறைப்படி இருந்தால் தான் அப்யசிக்கப்படும் வித்யையானது குழந்தைகளுக்கு நன்மார்க்கத்தை உண்டுபண்ணும், இல்லையேல் புத்தி வக்ரமாய் உள்ளதை அறியமுடியாமல் சோம்பேரிகளாய் நாஸ்திகர்களாய் அந்யாயமாய் குழந்தைகள் கெட்டுப்போவார்கள். வித்யா தேவி அனுக்ரஹிக்கமாட்டாள். (121)

மஹிமை தங்கிய வித்யாதிகளின் அப்யாசமும் ஒழுங்குபெற அந்தந்த தேச பாஷையிலேயே ஜாதிமத குல ஆசாராதிகளின் சுருக்கம், உத்தம உத்தமிகளின் சரித்ர சுருக்கம், அந்தந்த தேச விசேஷங்களின் சரித்ர சுருக்கம், ராஜரீகத்தின் சுருக்கம், குடும்ப வாழ்க்கைக்கு ஆவசியகமான சங்கதிகளின் சுருக்கம், கணிதத்தின் சுருக்கம், சுகாதார விஷயங்களின் சுருக்கம், அந்தந்த நீதிகளின் சுருக்கம் இவைகள் மட்டிலும் எல்லாக் குழந்தைகளுக்கும் குலாசார மர்யாதை தாண்டாத ரீதியில் 5வது வயது முதல் 11 வயது முடிய பால பாடசாலைகள் எற்படுத்தி யோக்யமாய் அவசியம் அப்யசித்து வைக்கப்படவேண்டும். (122,123)

குழந்தைகளுக்கு சரீர திருடத்தைக் குறித்து குணத்துடன் தேஹாப்பியாசமும் வேண்டும். (124)

சர்வமாதிரு பாஷையான சம்ஸ்கிருதமும் போகமோக்ஷப்ரதமான குலவித்தையும், பொதுவாய் பேசப்பழக சாதகமாய் கௌட பாஷையும் அந்தந்த நீதி தர்மங்களை போதிக்கிற ராஜகீய கலையும் அந்தந்த குலோசிதமான தொழில்முறையும், 12வது வயதிலிருந்து ஆரம்பித்து குழந்தைகளுக்கு அப்யசித்து வைக்கவேண்டும். இவ்

வித லோகோபகாரமான அந்தந்த ஜாதி தர்மம், ஆசாரம், தொழில் கலை, முதலிய சக்தி, அந்தந்த குழந்தைகளின்ரக்தத்தில் அதிஸூக்ஷ்மமாய் அநாதியாகவே வெவ்வேருகக் கலந்திருக்கிறது. ஒவ்வொரு இலைகளிலும் பழங்களிலும் உள்ள சாற்றிலும், சாரத்திலும், ருசிபேதம் அநாதியாயிருப்பதுபோல் என்றறியவும், இதை மீறினல் அநர்த்தம் தான். (125, 126, 127, 128, 129, 130)

குலவித்யையைத் தெரிந்துகொண்டமேல் மற்ற விஷயங்களைத் தெரிந்துகொள்ளலாம், மர்யாதை தாண்டாமல் வேண்டிய அம்சங்களை ஒப்புக்கொள்ளலாம், மற்றப்படி விபரீத மேற்படும். (131)

சுருதி, ஸ்மிருதி, சதாசாரம், மூலப்ரமாணகம் ஆதலால் அவ்வழி சிறந்தது. (132)

சாஸ்திராதிகளில் ஒன்றுக் கொன்று அநேகம் வித்யாசம் இருக்கின்றனவேயெனில் யுக கல்ப பேதங்களை அனுசரித்து என்றறியவும். (133)

ப்ரதான மூலக்ரந்தத்திற்கும் அங்கசாஸ்திரங்களுக்கும் பேதகப்படுமானல் மூலக்ரந்தத்தின் வழி அனுசரிக்க வேண்டியது. (134)

(குறிப்பு:—சுருதி முதல் 18 வித்யைகளிலும் தனித்தனியாய் ஆறுவித ப்ரமாணரீதியில் வாக்யங்கள், சுலோகங்கள், மந்திரங்கள், அமைந்திருக்கின்றன. இவ்வித ப்ரமாணவாக்யங்களையும் ஷட்வித லிங்க தாத்பர்ய ரீதியை அனுசரித்தும் மீமாம்சாந்யாய ரீதியிலும் அர்த்தம்பண்ண வேண்டும். பூர்வாபரபாமர்சத்தை மறக்கக்கூடாது. இவ்விதம் அர்த்தம் செய்துகொண்டால் விஷயம் புரியும். தவிர ஒவ்வொருசாஸ்திரமும் வேதமாதாவின் தாத்பர்யத்தை அந்தந்தவழியில் ஒவ்வொன்றை முக்யமாக தெரியப்படுத்தவந்தது. மற்றதுகளை ப்ரசங்கானுப்ரசங்கமாய் தெரிவித்திருக்கும். அந்தந்த விஷயத்துக்கு அந்தந்த சாஸ்திரம்தான் முக்யப்ரமாணம். ஆயினும் ஸ்மிருதி, தர்மவிஷயத்துக்குமட்டிலும் முக்யமாயிருந்தாலும், மற்ற சங்கதிகளிலும் அதன் வழிபாய்த்தான் மற்றசாஸ்திரங்களின் முக்ய

சமாசாரங்களையும் ப்ரமாணமாய் எடுத்துக்கொள்ளலாம். இதை யாரும் எப்போதும் மீறக்கூடாது. மீறினால் அனர்த்தம். ஸ்மிருதிக்கு அவ்வளவு கௌரவம் அநாதி காலமாகவே இருக்கிறது. தவிர தன் சூத்ரகாரர்களால் சொல்லப்படாத சிற்சில உத்தம கார்யங்களும் நடத்தப்படலாம். இதேபோல் ஸ்மிருத்யாதிகளில் அடிக்கடி சொல்லப்படுகிற சிற்சில கார்யவிசேஷங்களுக்கு மூலப்ரமாணகமானசுருதி வாக்யம் ப்ரசாரத்திலில்லாதபோதிலும் சுருதிக்கு சர்வ சாஸ்திரங்களும் வியாக்யானமாவதால், மூலமில்லாமல் வியாக்யாநம் எவ்விதம் ஏற்படும். மூலம் இருக்கு, உலகில் ப்ரசாரமில்லாவிடினும் நம்பியாகவேண்டும். தவிர மேலேசொன்ன ஷட்வித ப்ரமாணரீதியில், சுருதியில், சுருதி சித்த ப்ரமாணரீதியில், வித்யாசம் வந்தால் விகல்பம் தான், அந்தந்த சாகையை அனுஷ்டிப்பவர்கள் அததில் நிற்கவேண்டும். சுருதிக்கும் ஸ்மிருத்யாதிகளுக்கும் மேலேசொன்னபடி வித்யாசப் பட்டால் மற்றதைத் தள்ளவேண்டியதுதான். சுருதி சர்வகாரணமல்லவா? ஆனாலும், ஸ்மிருத்யாதிகளில் இருக்கிற சுருதி சித்தப்ரமாண வாக்யத்துக்கும் சுருதியிலிருக்கிற லிங்க சித்த ப்ரமாண வாக்யத்துக்கும் விரோதமேற்படின், சுருதியிலிருக்கிற லிங்க சித்தப்ரமாண ரூபமான வாக்யங்கள் பாராயணார்கமாக மட்டிலும் ப்ரயோஜனப்படும். ஸ்மிருத்யாதிகளில் இருக்கிற சுருதி சித்த ப்ரமாணவாக்யங்களுக்கு மூலச்ருதி கட்டாயம் இருந்தாக வேண்டும். ப்ரசாரமில்லாவிடினும்நம்பித் தீரவேண்டும், அவ்வழி தான் நடந்தாகவேண்டும் என்று வேதமாதாவே உத்கோஷித்திருக்கிறாள்.

உதாரணமாக சிற்சில லிங்கசித்தப்ரமாணகமான வேதவாக்யங்களை பூர்வாபரபராமர்சமன்னியில் அர்த்தம் பார்த்தால் ருதுமதீ விவாஹம் சாஸ்திரீயம் என்று தோன்றும். ஆனால் சுருதிசித்தப்ரமாணகமான ரீதியில் இருக்கிற ஸ்மிருதி வாக்யங்களுக்கு நேர் விரோதமாவதால் முன்சொன்னபடி அந்த மந்திரம் பாராயணார்ஹம் தான்; அனுஷ்டேயமாகாது. ஸ்மிருதிக்கு வேதமாதா கொடுத்திருக்கும் கௌரவத்தை மற்றவர்கள் எவ்விதம் அலக்ஷ்யம் செய்வது இவ்

விதம் ப்ராமாண்யாப்ராமாண்யம் பெரியோர்கள் மூலம் தெரிந்து கொண்டு நடப்பதுதான் உசிதம்.

தவிர ஒவ்வொரு க்ரந்தத்துக்கும் அத்வைதம் தான் அந்தரங்க அபிப்ராயம், மற்றதுகளை யுககல்ப பேதரீதியிலும் அதிகாரி பேத ரீதியிலும் காலதேச வர்த்தமான பேதரீதியிலும் தன்விஷயத்தைச் சொல்வதோடு ப்ரசங்கானு ப்ரசங்கமாய் கோஷிக்கின்றன. இவைகளில் முக்ய தாத்பர்யமில்லை. ஆதலால் வீண் வாதம் உதவாது. (135)

மேலே சொன்ன வித்யாதிகளும் அந்தந்த குருவின் மூலம் சுசுரூஷை செய்து பக்தியுடன் அப்யசிக்கவேண்டும். மற்றபடி விபரீதமாகும். (136)

அதற்குத் தகுந்தபடி பாடகசாலைகளும், கலாசாலைகளும் வித்யாசாலைகளும் ஒழுங்குமுறைப்படி ஏற்பாடுசெய்யவேண்டும். (137)

இவ்விதம் வித்யாப்யாசாதிகள் முடிந்தமேல் அந்தந்த ஜாதீயமான கார்யம் பார்க்கப்படவேண்டும். (138)

ஆயினும் வித்யாப்யாசம் பூர்ணமானமேல் அது விஷயமான லோக ஞானத்தின் பொருட்டு பெரியோர்களுடன் தீர்த்தாடனாதிகள் செய்வது உசிதமானது. (139)

வித்யா விஷயம் விபரீதமாக்கப் படுமானல் எல்லாம் சூன்யமாகும். ஒழுங்குபெறவேண்டும். (140)

வித்யாசித்தியும் விவாஹத்திற்குபிறகு ஏற்படமாட்டாது (141)

ஆதலால் குழந்தைகளுக்கு குலோசிதமாய் 8வது வயது முதலியவைகளில் ப்ரம்மசர்யத்தை ஏற்படுத்தி, குலோசிதமான வித்யாப்யாசத்துக்கு யோக்யமான குருவினிடம் குழந்தைகளை ஒப்புவிக்கவேண்டும். (142, 143)

குருகுலம் வாசம்செய்யும் குழந்தைகளும் பக்தியுடன் வித்யா விநய சம்பத்து ஏற்படும் வரை, அநேகமாக 24 வயது வரை ப்ரம்ம சர்யத்தைக் காப்பாற்றவேண்டும். (144)

வித்யாப்யாசம்செய்யும் குழந்தைகளால் தங்களுடையக்ஷேமத் தைக்கருதியும் பின்னால் தங்களுக்கு ஏற்படும் சந்ததிகளின் க்ஷேமத்தைக்கருதியும் இவ்விதமே சீலம், உதாரபாவம் முதலிய குண விருத்திக்காகவும், வித்யாப்ரசாதசித்திக்காகவும், புத்திவிருத்திக் காகவும் குருப்ரசாத சித்திக்காகவும், மனோபலவிருத்திக்காகவும், சரீரபல விருத்திக்காகவும், சௌந்தர்யாதிசயங்களின் விருத்திக் காகவும், ப்ரம்மசர்யம் காப்பாற்றப்படவேண்டும். (145, 146, 147, 148, 149, 150, 151)

பிரம்மசர்யத்துக்குத்தக்கவாறு பூமிதேவிப்ரகாசிப்பாள். ப்ரம் மசர்யம் காப்பாற்றப்பட்டால் ப்ரம்ம ஞானமல்லவா உதையமா கிறது, (152, 153)

ஆதலால் யுவர்கள் எந்த சமயமும் ஸ்திரீமத்தியில் இருக்கக் கூடாது, ஸ்திரீ ஜன்மா நெருப்பு, புருஷ ஜன்மா நெய், வளர்ப்பா னேன். யுவாவாயுள்ளவன், தன் தாயாயிருந்தாலும் தாயோடுகூட ஏகாசனத்தில் உட்கார்ந்து தனித்துப் பேசக்கூடாது, இந்திரியவர் கம் அவ்வளவு துஸ்ஸ்வபாவமுள்ளது, விவேகிகளையும் விஷயத்தில் அமுக்கிவிடுகிறது, ஆதலால் ப்ரம்மசர்யத்தில் மிக மிக ஜாக்ரதை வேண்டும். (154, 155, 156, 157)

விவாஹ கர்மாவும் வித்யா விநய சம்பத்து ஏற்பட்டவர்களுக்கு குருவின் ஆசீர்வாதபூர்வமாய் நடத்தவேண்டும். தவிர யாவராலும் அந்தந்த ஜாதி மத குல ஆசாரங்களுக்கு அடையாளமாய் சர்வேசு னால் ஏற்படுத்தப்பட்ட வஸ்திராதி தாரணம், எக்ஞோபவீத தார ணம், சிகா தாரணம், புண்டிர தாரணம் முதலிய தார்மிக லக்ஷணம் எவ்வாற்றாலும் மாற்றப்படக்கூடாது. அவலக்ஷணம்கூடாது, அவ மானப் படுத்தப்படக் கூடாது, கச்சமில்லாமலும், சிகையில்லாம லும் கிரஹஸ்தன் எக்கார்யம் செய்தாலும் பிரயோஜனமில்லை, விபரீ

தம் அவசியம் ஏற்படும்: இதரர் தன் அடையாளங்களை மாற்றுகிறார்களா, இவ்விதமிருக்க சநாதனிகளுக்கு ஜாக்ரதை அவசியம். தன் தனது குல ஆசாராதிகளால் அனுபவிக்கப்படுகிற ஸ்வஸ்திரீ சங்கமும் ப்ரம்மசர்யம்தான் இவ்வுத்தம வழியால் இவ்வுலகில் ப்ரஜாபிவிருத்தி ஏற்படட்டும். பூமிதேவிப்ரகாசிப்பாள். (158, 159, 160, 161.)

எவ்வாற்றாலும், ருதமதீ விவாஹம் யாருக்குமே உதவாது. த்ருடசந்தான விருத்திக்கு அது காரணமாகாது. பின், அனர்த்த காரணமாகும். வீண் யுக்திகள் உலகிற்கு உதவாது. த்ருடசந்தான விருத்திக்கு முன் சொன்னதுபோல் புமான்கள் பிரம்ம சர்யத்தைக் காற்பதுதான் சரியான காரணம். (162, 163, 164,)

(குறிப்பு:—ருதுவான மேல்விவாஹ மென்றால், ஹத்து உலமானமாகும். அநேகம் குழந்தைகளுக்கு விவாஹத்திற்கே திண்டாட்டம் நேரிடும். அநேக ருதுகாலங்கள் வீணாகும், ரகஸ்ய அக்ரமங்களுக்குக் காரணமாகும். குலதர்மம் கெடும். குலதர்மத்தை கவனியாது லாவண்யத்தையே கவனிக்கும் ஸ்திரீகளின் வீம்பு, விருத்தியாகும். விபரீதமான கலப்பு விவாஹகத்திற்கும் அடிகோலும். தவிர பால்ய வைதவ்யதையைப் பொருக்க முடியாதவர்கள், ருதுமதீ வைதவ்யதையை பொருக்கலாம் போலும், உளருகிறார்கள். இன்னும் ருதுகாலங்கள் வீணாவதின் மூலம் நரம்புகள் முற்றி, உள் சதை கர்ப்பப்பையில் வளர்ந்து நெருக்கடி ஏற்பட்டு குழந்தைகள் ஏற்படாமலே போய்விடும் அல்லது தர்குணம் பொருந்திய கசடர்கள் உண்டாகலாம். நரம்பு முற்றினதாலும் உள்சதை வளர்வதாலும் ப்ரசவிக்க முடியாமல், அவ்வித ஸ்திரீகளுக்கே ஆபத்து மேற்படலாம். இவ்வித ஸ்திரீகளின் சேர்க்கையால், புமான்களுக்கு ஆண்மையற்று துர்பலமும் துர்வியாதிகளும் உண்டாகும். இதையறியாது ஆஹாராதி நியமங்களை துலைத்து ப்ரம்மசர்யத்தை விரட்டி கண்ட பானங்களை உபயோகித்து இவ்விதம் விபரீதத்தால் ஏற்படுகிற கஷ்டங்களை, பூஜனீயமான பால்ய விவாஹத்தின் பேரில், ஹடமாக ஏற்றி ருதுமதீவிவாஹம் மேன்மை என்று சொல்வது எவ்விதம் பொருந்தும், நமது ஒவ்வொருகர்மாவும் ஆத்மாசாதகமானது

விவாஹம்என்பது தர்மப்ரஜாபிவிருத்திக்கு அனுகூலமாய் ஏற்பட்ட ஓர் உத்தம கர்மா, விஷயசுகம் அவாந்திரப்ரயோஜனம். குணசந்தானவிருத்திதான் குலத்தை ஈடேற்றும் பூமிதேவி ப்ரகாசிப்பாள்.

தவிர, விவாஹமாகாத ருதுமதி ஸ்திரீக்கு லஜ்ஜையுடன் கூடிய கடைக்கண் பார்வை முதலிய குழந்தையழகு போய்விடுகிறது; அவ்வித விவாஹத்தால் வெட்கமற்ற அவ்வித ஸ்திரீயின் திருஷ்டி பயமன்னியில் வரன்பேரில் நேரில் பாயும். வரனுக்குள்ள தீரலக்ஷணம் மங்கவ்வும். தவிர, ருதுகாலத்தில் புருஷன் ஞாபகம் இருக்க வேண்டும் யென்ற நியமத்தால் யாரை அவ்விதஸ்திரீ மனதில் த்யானம் செய்வது இவ்வாற்றால் சநாதனிகளுக்கு ருதுமதி விவாஹம் உதவாது. அதிலும் ப்ராம்மண வர்க்கத்துக்கு கட்டோடு கூடாது. (165, 166, 167, 168)

(குறிப்பு:—பெண்குழந்தைகளுக்கு, ஆண்குழந்தைகளின் உபநயந வயசு விவாஹ வயசாக தீர்மானித்திருக்கிறார்கள். கடாசி பக்ஷம் ருது ஆவதற்குள் நடந்தாகவேண்டும். முக்ய கர்மாவான இதை துலேத்தால் ஜாதிவ்யவஸ்தை அழியும், வீண்வாதம்கூடாது)

சாஸ்திரீய வழிதாண்டாமல் பெரியோர்கள்போல் தர்மநீதியாய் மந்திரங்களே கவனித்தாலும் இதற்கு இடமே கிடையாது. அது நிந்திக்கத்தக்கது. ருது மத்யர்த்தமாய் லிங்கவசனத்தால் சொல்லுகிற மந்திரங்கள் ப்ரமாணமாகாது. ஆனால் அவை கன்யா விவாஹ மத்தியில், வரும் கால க்ஷேமத்தை குறித்து தாம்பத்ய தர்மங்களே போதிக்கிற ஆசீர்வசன மந்திரங்களாக ப்ரயோகிக்கப்படுகின்றன. மந்திரங்களுக்கு ஓர் வித சக்தி அநாதிகாலமாகவே இருக்கிறது. முறையாக ஜபித்தால் குழந்தைகளுக்கு அந்தந்த காலத்தில் அனுகூலமாகிறது. (169, 170, 171, 172)

(குறிப்பு:—விவரம் வந்தமேல் அவனவனுய் தன் தனது கார்யத்தை பார்ப்பதுதான் உசிதம் என்ற ந்யாயம் சாமான்யமானது. லௌகிகமான கார்யத்தில் அநேகமாய் பொருந்தலாம், வைதிகமான கார்யங்களில் விசேஷ விதிகளால் அந்த ந்யாயம் அடிக்கடி தள்ளப்

பட்டுவிடுகிறது. பசிக்கு சாப்பிட்டால் தான் பசி அடங்கும் என்ற விவரம் வரும் வரையில் குழந்தைகளை பட்டினிபோட முடிகிறதா; சாஸ்திரீயமான யோசனை வேண்டும், இவர்களது வழி அதார்மிக மானது, உதவாது. தவிர ஒருநாள் விவாஹம், உபநயநம் என்பது மரணம் சம்பவித்த சமயம் எடுத்த கர்மா முடிவடைய ஏற்பட்டது. இதை எப்போதும் செய்துகொள்ளலாமா? ஞானம் வேண்டும்.)

நரபலி முதலிய சிற்சில கர்மாபோல முன்யுகங்களில் சிலரால் அபூர்வமாய் நடத்தப்பட்ட இந்த ருதுமதீ விவாஹம், யாவராலும் கலியில் தள்ளப்படவேண்டுமென்பதாய் பெரியோர்கள் இதை இந்த யுகத்தில் விலக்கியிருக்கிறார்கள். ருது காலத்தில் புருஷ சங்கமம் ஸ்திரீக்கு அவசியமென்றிருப்பதை விசேஷ விதியாய் சொல்லு கிறார்கள். சூன்ய மாசங்களில் முதல்ருதுவாகுமானால் 16 நாளுக் குள் விவாஹம் எப்படி நடத்தமுடியும். தக்ஷிணாயனத்தில் ருது வாகுமானாலும், அநேகம் ருதுகாலங்கள் வீணாகும். அவ்வித ஸ்திரீ யாரை புருஷனாக த்யானிப்பது. ப்ரதம விவாஹமோ புருஷனுக்கு தக்ஷிணாயனம் உதவாது, யோக்யமான பதில்வேண்டும். 173, 174, 175)

சென்ற ஆயிரக்கணக்கான யுகங்களிலும் சகல ஜாதியினர்க ளாலும் பால்ய விவாஹமே ஆசரிக்கப்பட்டுவந்தது வயதில் விபரீத மான ஏற்ற தாழ்வாய் நடத்திய சிற்சில விவாஹங்களும் அநுலோம ரீதியில் நடத்திய சிற்சில விவாகங்களும் பந்தயம்வைத்தல் ஸ்வயம் வரணம் வரித்தல் இவ்வித ரீதியில் நடத்திய சிற்சில ருதுமதீ விவா கங்களும் சந்ததி விருத்திக்கு தமையன் முதலிய பெரியோரிடம் மனைவியை அனுப்பித்தல் முதலிய சமாசாரங்களும் கலியில் அவசி யம் தள்ளத்தகுந்தன. அவ்விதம் அந்த யுகங்களில் நடந்ததும், ஆவச்யகமான மஹநீயமான லோகக்ஷேமத்தைக்கருதி, யோகசித்தி யுள்ள சிற்சில மஹநீயர்களால் நடத்தப்பட்டதென்பதை மறக்கக் கூடாது, தவிர புராணசரிதமாகின்றன. ஆதலால் தர்மவிஷயத்தில் ப்ரமாணமாகமாட்டாது. (176, 177)

மஹிமைதங்கிய பால்யவிவாஹம்தான் சுகப்ரசவ காரமானது. (178)

உழுது தொழியடித்த வயக்காடு காலத்தில் விதைக்காதபோனால் உரம்கெட்டு உலர்ந்துபோகும். கண்டதுகள் முளைக்கும், அதுபோல் சர்வேசனுல் சந்ததி விருத்திக்கு புமானுக்கு அனுகூலமாய் கன்னிகையாகிய க்ஷேத்ரத்தை ஸ்ருஷ்டித்து ருதுகாலமாகிய பக்வ காலமும் கருணையுடன் அமைக்கப்பட்டிருப்பதை விபரீதம் செய்தால் அநேகம் ஆபாசங்கள் தான் சம்பவிக்கும். (179)

இந்த இந்த காலத்திற்கு இது இது தகுதி, தகுதியில்லைஎன்ற ரீதியிலும். இது இது ஆசுரபாவமானது, தைவிகபாவமானது, சநாதனீயமானது, ப்ராம்மணீயமானது என்ற ரீதியிலும், சம்மதா சம்மத வழியாய் அநந்தமான சமாசாரங்களை சுருதிமாதா வெளியிட்டிருக்கிருள். எந்தக்காலத்தில் எவர்களுக்கு எது உசிதமோ, அந்த சம்மத மார்க்கத்தைத்தான் அவரவர்கள் ஆசரிக்கவேண்டும்; விபரீதத்தால் அனர்த்தம்தான் ஏற்படும். (180)

இவ்விதமான சகல சமாசாரங்களையும் கல்பகாராதி மஹரிஷிகள்தான் அறிந்தவர்கள், நாமல்ல. (181)

மந்திரங்களின் உத்பத்தி, அதன் ஸ்வரம், அதன் தேவதை, அதன் அர்த்தம், தாத்பர்யம், அதை விநியோகிக்கும்விதம்; அதன் காலம், அததற்கு அதிகாரி பேதம், அதன் ப்ரயோஜனம், இது சாமான்யம், இது விசேஷம் என்றதான மந்திரசம்பந்தமான சர்வ சமாசாரங்களையும் ஆதியிலேயே கண்டறிந்தவர்கள் மஹரிஷிகள், நாமல்ல. ஆதலால் அவர்கள் தர்ம ப்ரவர்த்தகர்கள், கோத்ரப்ரவர்த்தகர்கள். (182)

தவிர, மூன்று காலத்திய சர்வ ஜீவகோடிகளுடைய சர்வசமாசாரங்களையும் அவர்கள்தான் அறிந்தவர்கள். ஆதலால் அவர்கள் தான் தர்மப்ரவர்த்தகர்கள். தர்மரக்ஷகர்கள், நாமல்ல, ஆதலால் அசைக்கப்படமுடியாத அவர்களது கிறின கீற்றை எவனும் தாண்டக்கூடாது. பால்யவிவாஹம்தான் ஸ்திரீகளுக்கு அமைத்திருக்கிருர்கள். இளம் செடிகொடி யோக்யமானபாதையில் வளர்ந்து படற, ஏற்பாடுகள் செய்வதுபோல், யோக்யமான ஜனவிருத்தி ஏற்பட பதி

பக்தி ப்ரதமார்க்கத்தில் ஸ்திரீகள் நடக்க அனுகுணமாய் பால்ய விவாஹம் ஸ்திரீ ஜனங்களுக்கு அமைக்கப்பட்டிருக்கிறது. அவ்வித அம்மஹான்கள் சொன்னவழியாய் சர்வமங்கள சமாசாரங்களேயும் உலகினர் செய்யவேண்டும். (183, 184, 185)

இன்னும் குழந்தைகளுக்கு வரவதூக்களைத் தேடுவது பெற்ருேர் முதலிய பெரியோர்களின் பொருப்பு. (186)

குறிப்பு:—வேலிபயிரை அழிக்காது. மீறிபெற்ருேர்கள் மூலம் பெரிய சங்கடங்கள் வந்தால் அது அக்குழந்தைகளின் ஜன்மாந்திர வினை தான்.

வரவதூக்கள் விஷயமாய் கண்டிப்புப்பேசி அபகரிக்கப்படும் தனம் குலக்ஷயகரமானது தன் தகப்பனுருடையவும் தன்னுடைய வும் சகோதரிகளுடைய பெண்களை, விவாஹம் செய்துகொள்வதும் இவ்விதமே முறைதவரின விவாஹமும், குலக்ஷயகரமானது. ஓடும் கொடியைத்திருப்பவது ந்யாயமாகாது. (187, 188)

வாதமும் விவாஹமும் சர்வசமாசாரத்தாலும் துல்யமாயிருந் தால் உத்தமம்தான். ஆனுலும், குணமுள்ளவரவதூக்களை ஏழை வம்சத்திலிருந்தாலும் தேடி அடையலாம். (189)

புமானுக்கு விஷயவைராக்யம் உள்ளபடி எந்தசமயம் வந்தா லும் விவாஹம் ஆனுலும் ஆகாவிட்டாலும் சந்ததி இருந்தாலும் இல்லாவிட்டாலும் குலாசாரரீதியில் உடனேயே நான்காவது ஆச்ரம வழியை பின்பற்றலாம் (190)

பெரியோர்களது உபதேசவழியாய் பராசாஷ்டையான ஸ்வானு பூதிவரும்வரை, தங்களது குல ஆசாரத்தை அனுசரித்து லோகோபகாரிகளாய் சரீரயாத்ரைமட்டிலும் செய்துகொண்டு மேல் படியை அடையயத்தனம் செய்யவேண்டும். கண்டபடி வாசா வேதாந்தம்பேசி, தங்களேயும் அதோகதியாக்கிக்கொண்டு உலகை யும் கொந்தழிக்கச் செய்யக்கூடாது. (191)

அவனது மனைவியும் இவ்வுலகில் விஷயங்களை துச்சமாய் எண்ணி வைராக்யத்துடன் குழந்தைகளை குலரீதியில் நல்லவழிப்படுத்தி, பெரியோர்கள் மூலம் புராணாதி சத்கதைகளை ச்ரவணம் செய்து கொண்டு தனது குடும்பத்தில்தான் காலம் கழிக்கவேண்டும். இது தான் குலஸ்திரீயின் லக்ஷணம். (192)

ஸ்திரீகளுக்கு மறு விவாஹமென்பது எங்கும் எப்போதும் யாவருக்கும் கூடவே கூடாது. (193)

ஏனெனில் அவித்யா சக்தி இவ்வித கார்யங்களால் ஸ்திரீ ப்ராயமாய் உலகை ஆக்கிவிடுகிறுள்.

குறிப்பு:—அபிமானத் தடிப்பால் சரீரேந்திரிய சுகத்தையே நாடி அதிகம் சஞ்சரிப்பதால் சகல ஜீவவர்க்கங்களிலும் ஸ்திரீ சிருஷ்டிதான் அதிகம் அவ்விததமோகுணம் கொஞ்சமாவது அடங்குவதால் மனிதவர்க்கத்தில் அவ்வளவு அதிகமில்லை. அப்படியிருந்தும் ஸ்திரீ சிருஷ்டி அதிகமானல் கஷ்டமே என்று கருணைகொண்டு அந்த ஸ்திரீகள் விஷயமாய் ஏக பத்னீ வ்ரதம் சிலாக்யமென்றிருந்த போதிலும் அதற்கு கதி வேண்டுமே என்று கருணையுடன் தகுந்த யோக்யதையுள்ள புமானுக்கு உசிதமானவாறு அநேகம் கன்னிகைகளை விவாஹம் செய்துகொள்ளலாமென்றும் தகுதியான வயதுள்ளவனுனல் மனைவியை இழந்த புமான்மட்டிலும் மறு விவாஹம் செய்துகொள்ளலா மென்றும் சரீர வகையறு அமைப்பு ஸ்திரீகளுக்கு வித்யாசமாயிருப்பதாலும் சந்ததி விருத்தி தர்மம் புருஷனைச் சார்ந்ததனுலும் மறு விவாஹமென்பதும் அனேகம் புமான்களை ஒரே காலத்தில் அடையலாமென்பதும் ஸ்திரீகளுக்கு உதவாது என்றும் சாஸ்திரங்கள் உத்கோஷிக்கின்றன. பெரியோர்களும் கதறுகிறுர்கள். இதை மீறினல் உலகம் மிருகப்ராயம்தானுகும். அது உதவாது. (194)

சர்வ நாசகரமான அவ்விவாஹத்தைக்காட்டிலும் சாஸ்திரீயமான பத்யனுகமனம் அவ்வித ஸ்திரீகளுக்கு மிக மிக புண்யமானது.

குறிப்பு:—பத்யனுகமனத்தில் கண்டிப்புக்கிடையாது. அவர்களது இஷ்டத்தைப்பொருத்தது. இது விஷயமாய் வீண் வாதம் வேண்டாம். (195)

இதுகளை யறியாது மிருகப்ராயமான துர்வாசனைகளால் உலகம் கேட்டடைகிறது. ஹா! மிக பரிதாபம். (196)

பசுபக்ஷ்யாதி ஜன்மசித்தமான வழியிலேயே இருந்தால் அவைகளுக்கும் மனிதவர்க்கத்துக்கும் பேதகம் என்ன இருக்கிறது.(197)

இவ்வாற்றால் சிற்சில ஸ்திரீகளுக்கு பதிஹீனதையானது ஜன்மாந்திர வினை சம்மந்தமானது என்று பச்சாத்தாபத்துடன் துக்கத்தை வழியாய் மாற்றியும் அடக்கிக்கொண்டும் உதாசீனமாயிருப்பதுதான் பெற்றோர்களுக்கும் அவ்வித ஸ்திரீகளுக்கும் உலகினருக்கும் உசிதமானது. (198)

அப்படியில்லையேல் துர்புத்தி கொண்டவர்கள் அவ்வித ஸ்திரீகளையும் கெடுத்து தாங்களும் அதோகதி யடைகிறார்கள். (199)

புத்திவிருத்தி அவ்விதமானவர்களுக்கு சீர்பெற இவ்வித கேள்விகளை கேட்போம். (200)

சிற்சில ஸ்திரீகளுக்கு புருஷன் சகல சௌகர்யத்துடனிருக்கும்போதும், துரெண்ணம் வருகிறதே அது லோக சம்மதமா? உங்களது அபிப்ராயமாக அது சரியாகிறதே. ஏன் ஆகக்கூடாது, சிற்சில புமான்களுக்கும் அந்யஸ்திரீசம்பந்தம் ஏற்படுகிறதே இதுவும் லோகசம்மதமா, உங்கள் வழியாய் சரீரேந்திரிய சுகம்தானே பெரிது. ஏன் கோபமடையவேண்டும். தவிர, அவ்விதஸ்திரீகளுக்கு வயோநிபந்தனையை ஏன் உண்டுபண்ணுகிறீர்கள். (201, 202, 203)

குறிப்பு:—கிழவிகளுக்கும் நடத்தலாமே, 50 வயதான புருஷன் மட்டிலும் விவாஹம் செய்துகொள்ளுகிறான். அதுபோல் ஸ்திரீகளும் நடத்திக்கொள்ளட்டுமே, அதையேன் உதவாதென்கிறீர்கள், உங்களுக்கு சரீரேந்திரிய சுகம்தானே முக்யம், ஜன்மசாதகமாயும்

ஒப்புக்கொள்ளுகிறீர்கள். பின், விவாஹம் என்ற ஓர் பந்தகம் எதற்கு? ஹா! மிகபரிதாபம் இவர்களது வழி மிகமிகதுச்சமானது.

பாபவார்த்தையாலும் செய்கையாலும், தங்களது உத்தம வாழ்க்கையை மிருகப்ராயமாக்கிக் கொள்கிருர்கள். ஹா! மிகப்பரிதாபம்? சந்ததிவிருத்திதர்மமும் புருஷனைசார்ந்தது. ஆனதால் இப் புண்யபூமியில் ஸ்திரீகளுக்கு மறுவிவாஹமென்பது சர்வாத்மனு உதவாது. (204, 205)

ஆனதால் பதிஹீநதையான ஸ்திரீகள், தங்கள் தங்கள் குல ஆசாரத்தை அனுசரித்து வைராக்யத்துடனும், பாதிவ்ரத்யதர்மத்துடனும், லோகாந்தரம்சென்ற பதியின்லோகம் கிடைக்கவேண்டுமென்றும் ஸ்திரீஜன்மம் வந்தால் அவரையே, மறுபடி அடைந்து சௌமங்கல்யத்துடன் வாழவேண்டுமென்றும், ஸ்திரீஜன்மமே துலையவேண்டுமென்றும் குழந்தைகளிருந்தால் நல்வழிப்படுத்தியும் புண்யகதைகளை சிரவணம்செய்தும், சர்வேச்வரனை த்யானித்து யதிபத்னீ போல் குடும்பத்திலேயே காலம்கழிக்கட்டும். (206)

இதேபோல் ஸ்திரீகளுக்கு புருஷர்கள்மாதிரி எல்லாவிஷயத்திலும் சர்வஸ்வாதந்திரியம் என்பதும் உதவாது. அது மிகக்கொடியது. நெருங்கிப்பழகுகிறவர்களிடம், கொடிகள்போல் லாவுவார்கள். தவிர, புருஷனிடம் ஆண்மையுண்டு, ஸ்திரீகளின்மனசு துர்பலமானது. இழுத்தஇடம் இழுபடுவார்கள். குடும்பதர்மம் கெடும். உதவாது. (207)

அவித்யாசக்தி புருஷவர்க்கத்தையே ஒருகை பார்க்கிருள். ஸ்திரீகள் விஷயம் என்னசொல்லமுடியும், ஆதலால் ஸ்திரீசமூகம் சர்வ அவஸ்தைகளிலும் தன்னை போஷணைசெய்கிற தனது நெருங்கிய பந்துஜன சமூகமத்தியிலேயே அடங்கிஇருக்கவேண்டும். (208, 209)

அப்படிஇருந்தாலும் குடும்பசம்பந்தமான கார்யங்களில் யோக்யமாய் ஸ்திரீகளை அனுசரித்துத்தான் புருஷர்கள் நடக்கவேண்டும். லோகக்ஷேமகரமான இவ்வுத்தமஸ்வாதந்திரியம்தான் அவர்களுக்கு அழகுபொருந்தியது. மற்றது நாசகரமானது. (210, 211)

தனதுபுருஷனுக்கு வசமான சதீமணி ச்ரமசாத்யமான எந்த கார்யமும் செய்யவேண்டாம். அறியாமற்செய்யும் சிற்சில பிசகுக ளும் இவர்களை பாதியாதிருப்பதுடன் தன்புருஷன் செய்யும் தார்மிக பலன்களில் இவர்களுக்கு முழுப்பங்குமுண்டு. இவர்களது குலதர்ம நடபடிக்கையால், கெட்டபுருஷனும் திருந்துவான். குடும்பமும் ப்ர காசிக்கும். குலதர்ம ரீதிதவறுது புருஷன் மனதை அனுசரித்தல் என்ற ஓர் சிரமத்தை மட்டிலும் ஒப்புக்கொண்டு வாழ்க்கையை நடத்தினுல், இவ்விதமான சதீமணிகளுக்கு பஞ்சபூதாத்மகமான ஜகத்தே சொன்னபடி கேட்கும், பாதிவ்ரத்யத்தின் மஹிமையை யார் சொல்லமுடியும். (212)

ஆனதால் ஸ்திரீகள் ஜகன் மாதாவான ஜானகிபோலும் புருஷர் கள் சர்வரக்ஷகரான ஸ்ரீ ராமன்போலும் விருத்தியடையட்டும். இப் பவும் இவ்வுலகில் அருந்ததீ, தமயந்தீ, நளாயினீ, சகுந்தலை, மதா லசை, சாவித்ரீ, ஸ்ரீ ருக்மணீ, அநசூயாதேவி முதலிய சதீசிகாமணி கள்போல் ஸ்திரீஜனங்கள் அங்கங்கு இருப்பதால்தான் அந்தந்த கார்யங்கள் நடைபெறுகின்றன. (213, 214)

இதுபோல்சித்தசுத்திகரமான இதரசமாசாரங்களையும் அறிந்து கொள்ளவேண்டும். எந்த ஜீவனுல் உலகிற்கோ, தனக்கோ மிகமிக உபகாரம் ஏற்படுகிறதோ, அதனிடம் ஈசுவராம்சம் அதிகமிருப்ப தாய் பாவனைசெய்யவேண்டும். சரமாயினும் அசரமாயினும் அதை ஹிம்சியாமலிருப்பதுடன் பரியாதையாய் போஷிக்கவும் வேண்டும். கோமாதா அவ்விதமஹிமை தங்கியவள். (215, 216, 217)

குறிப்பு.—மலைகள், வனப்ரதேசங்கள், பாலுள்ளமரங்கள், பழ முள்ளமரங்கள், சமிதர்ஹமான யாக்ஞியமான விருக்ஷங்கள், புஷ்ப லதைகள், செடிகொடிகள், அந்தந்தஜாதீய தர்மங்கள், இவைகள் மூலம் உலகிற்கு பேருபகாரம் ஏற்படுகிறது, உலகினனுபவம், இது களை வரம்புமீறி அழிக்கலாமா? அருவிகளிலும் நதிகளிலும் தண்ணூ ற்று வற்றலாமா? சோங்கை அழித்தால் மழைபொழியுமா? யோசனை வேண்டும். ஓஷதிவர்க்கங்கள் சாமான்யமானதா? ஒரு துளசி சிறு செடிதானே, பில்வம் முள்ளுள்ளமரம்தானே, அரசமரத்தில் என்ன

புஷ்பம் பழம் இருக்கிறது இதன்மஹிமைகளை யோகிகள்ஒருவாறு கண்டறிந்து சொல்லியிருக்கிறார்கள். மூலிகைகளென்றும் சர்வவிஷ விநாசகமென்றும் அதன் நிழல் சர்வரோக நிவாரக மென்றும் தேஜோவிருத்திகர மென்றும் சிந்தனைசக்தியை அனுக்ரஹம் செய்யுமென்றும் ஆயுர்விருத்திகரமென்றும் அருள் புரிந்திருக்கிறார்கள். ஆதலால் கோமாதாவைப்போல் மேலே சொன்னவைகளையும் காப்பாற்றவேண்டும், விருத்தி செய்யவேண்டும்.

நெய், பால், தயிர், வெண்ணெயின் மூலம், குழந்தைகள் முதல் யாவருக்கும் அருள் புரியும், கோமாதாவை ஹிம்சிக்கலாமா? ஜீவாதாரமான தனதான்ய விருத்திக்கும் காரணமான கோமாதாவை ஹிம்சிக்கலாமா? சிறு குடிசை முதல் பெரிய அரண்மனை வரையில் பரிசுத்தத்திற்குக் காரணமான கோமாதாவை ஹிம்சிக்கலாமா? இனியாவது பரிபாலிக்கப்படட்டும். (218)

இன்னும் வெளிவிருத்தியால் செய்யப்படுகிறதான மங்களகார்யங்களில் மங்களகரமானவாத்தியங்களும் ஆசாரக்ரமமான மந்திராதி கோஷங்களும் ஆவச்யகமானது. எனெனில் ப்ரோத்ஸாஹகரமானது சக்திவிருத்திகரமானது ப்ரயோஜனகரமானது, இவை நடைபெறு விடினும், நடுவில் நிருத்தினலும் விக்னசூசகமாகிறது. ஆனதால் பகிர்முககார்யங்களை துச்சமாய் எண்ணுகிற மஹான்களான யோகிவர்யர்களும், ஜனசமூதாயம் வழியுடன் முன்னேற வேண்டுமென்று கருணை கொண்டு இவ்வித சமயங்களில் கலந்து கொள்வார்கள். ப்ரோத்சாஹமும் செய்வார்கள். அவ்விதமஹனீயர்கள்போல் இதர மதசகோதரர்கள் இப்புண்யபூமியில் சநாதனிகளுக்குசகோதர புத்தி கொண்டு, இவ்வித கார்யங்களில் ஹிம்சைசெய்யக்கூடாது. அனுகூலமாயிருக்கவேண்டும். இதுதான்மர்யாதை. (219, 220, 221, 222)

இன்னும் ஒருவருக்கொருவர் வீண்விரோதங்களால் ஆலயாதிகளுக்கு எவ்வாற்றாலும், கெடுதல் நினைக்கக்கூடாது. (223)

இந்த மர்யாதை தாண்டினால் எவனாயிருந்தாலும் தண்டனையடைய வேண்டியவன். (224)

அந்தந்த ரீதியாய் அனுக்ரஹம் செய்கிற கடவுள் ஒருவர்தான். (225)

ஒரேஜலம் அநேகம் பெயரால் அழைக்கப் படுகிறதுபோல் சர்வேசனும் அழைக்கப்படுகிறார். (226)

ஸ்வர்ணமானது நகைரூபமாய் பலவிதமா யிருப்பதுபோல் ஈசனும் அந்தந்தரீதியில் தன்னை பலவிதம் செய்து காக்ஷிகொடுக்கிறார். (227)

நகை பலவிதமாயிருந்தாலும், தங்கத்தன்மையில் ஒன்றே அதுபோல், அந்தந்த நாமரூபத்தால் காக்ஷிகொடுத்தாலும், ஈசத்தன்மையால் ஒன்று தான். (228)

தவிர, விக்ரஹாராதனை விஷயமாய் வீண்தூஷணை ஏற்படுவதும் ந்யாயமில்லை. அது சர்வஹாநிகரமானது. (229)

யாவருடைய மனசும் ஏதாவது ஓர் வஸ்துவின் ரூபமாய் மாறி மாறி பரிணமித்துக்கொண்டிருக்கும். உள்ளபடி அதற்கு ரூபம் கிடையாது. (230)

நம்மை இவ்விதம் பலானரீதியில் சங்கடப்படுத்துகிற மனசை நாசம் செய்வதற்காக வேதமாதா அதன் வழியாய் ப்ரதீகாதிகளை கல்பித்திருக்கிறாள். (231)

அந்தர் விருத்திக்கு யோக்யமானவர்களைக் குறித்து புத்தி ப்ரமமடையாவண்ணம் விக்ரஹோபாசனையை சிற்சில இடங்களில் வேதமாதா தூஷணை செய்திருக்கிறாள்: பகிர்முகமுள்ளவர்களுக்கு அது பொருந்தாது. (232)

தவிர எந்த மார்க்கத்தவரும் ஏதாவது ஓர் அடையாளத்தை யேற்படுத்தி பொது ஸ்தலங்களை யேற்படுத்தி மனதால் எத்தனை யோபாவனைகள் செய்கிறார்களே, இதைமறுக்கமுடியுமா? இது விக்ரஹங்களாகாதோ? வீண் தூஷணை உதவாது. (233)

குறிப்பு:—விக்ரஹாராதனையை தூஷிக்கிறவர்களின் வீடுகளில், எத்தனை போட்டோபடங்கள் இருக்கின்றன, என்னந்யாயம்? அதை நாசம்செய்ய சம்மதிப்பார்களா?

மித்யாகல்பித விக்ரஹோபாசனையும் ஸ்வாநுபூதிப்ரதமானது. ஸ்வப்பினத்தில்கண்ட சிற்சில பதார்த்தம் ஜாக்ரத்காலத்திய சுபா சுபஸூசகமாகிறதல்லவா, பொய்யான இந்தசரீர ஒத்தாசையால் நிஜ மான தனது ஆத்மஸ்வரூபமடையப் படுகிறதல்லவா? அதுபோல் இந்த விக்ரஹோபாசனையும் என்று அறியவேண்டும். தூஷணை கூடாது, (234, 235, 236)

ஆனதால், விபரீதபுத்தியைத்தள்ளி ஆலயாதிகளை வழிப்ர காரம் ஒவ்வொரு சமுதாயமும் ஏற்படுத்திக்கொண்டு, வழிப்ரகாரம் ப்ரவேசித்து த்யானமோ தர்சனமோ பூஜையோ செய்வதுதான் உசிதம், விபரீதத்தால் கெடுதல் ஏற்படும். (237)

இவ்வழியனுசரித்து முன்னோர்கள் தங்களது ஆலயங்களிலும் கிரகங்களிலும் தேவதோபாசனை செய்தார்கள். (238)

முக்யகாரணமாக இதரர்களது ஆலயாதிகளுக்கு போகும்படி யேற்பட்டால் த்வேஷபுத்தியன்னியில் கௌரவத்துடன் இருவர்களு டைய மர்யாதையையும் தாண்டாமல் வரம்புக்குக் கட்டுப்பட்டு நடக்கலாம். இதுதான் தர்மநியாயமானது, ஒருவருக்கொருவர் மீறிக் கொண்டால் நம்பிக்கை பாழாகும். மந்திராதிகளால் ஏற்படுத்தப் பட்ட சக்தி உலமானமாகும். (239)

ஒரு மதத்தின் உட்பிறிவினர்களான சர்வஜாதியினர்களுக்கு மாய் பொதுவாய் நிர்மாணம்செய்யப்பட்ட மஹாலயத்தில் அந்தந்த ஜாதீயதர்மத்தை அனுசரித்து ஏற்படுத்தப்பட்ட மண்டபாதிகளில் நின்று தர்சனாதிகள் செய்வதுதான் லோகக்ஷேமகரமானதுமீறினால் கோரும் ப்ரயோஜனம் கிடையாததுடன் அநர்த்தத்தை சம்பாதித் துக்கொண்ட பாபம்தான் மிஞ்சும். எல்லாம் உலமானமாகும் சித்தி உண்டாகாது. (240)

குறிப்பு:—கர்ப்பகிரஹத்தில் பூஜை செய்கிறவர்கள் முதல், கோபுரதர்சனம் செய்கிறவர்கள்வரை ப்ரயோஜனம் யாவருக்கும்

சமுமேதவிரவித்யாசம் கிடையாது. இதுவிஷயம் ப்ராஹ்மணவர்க்கத்தைத்வேஷிக்கவேண்டாம், மூர்த்திகளுக்கு சக்திவிருத்திகரமான மந்திரங்களை ஜபிக்க சமீபமிருக்க வேண்டியவர்கள் வேறுவித்யாசமில்லை. தவிர சவர்ணர்களுக்குத்தான் பொதுவாகுமே தவிர, அவர்ணர்களுக்கும் பாஹ்யர்களுக்கும் எவ்வாவற்றாலும் சொந்தம் கிடையாது. வீண்வ்யவஹாரம் ஊத்துக்கு நிற்காது; அவ்விதமாய் அவர்ணர்களுக்கு சொந்தமில்லாவிடினும், கோபுர தர்சனத்தாலும் ரதோத்சவாதி சமயங்களில் உத்சவவிக்ரஹ தர்சனம், செய்தலாலும்; சநாதனதர்மத்தில் மறுபிறப்பாவது கிடைக்கட்டும் என்ற பக்தியுள்ள அவர்ணர்களில் தீண்டத்தகாதவர்கள் விஷயமாய் ஏற்படுத்தியிருக்கிற சநாதன தர்மத்தின் ஆகமசாஸ்திரங்களின் மஹிமையை; வீண்வ்யவகாரம் செய்கிறவர்கள் அறிவார்களா? உள்ளபடி கோவிலுக்குள் அமானுஷிகமான எந்த பதார்த்தம் யாரால்யாருக்கு அக்ரமமாக மோசம் பண்ணப்படுகிறது ஒன்றுமில்லையே; என் ஜாதிவ்யவஸ்தையை அழிக்கவேண்டும். என் தர்மதேவதையை புண்படுத்தவேண்டும். கல்லும் கட்டையும் மனுஷ்யகிருதமான, ஏறிமிதித்து அடிக்கப்பட்ட கல்முதலிய பொம்மைகளும், சாமான் பண்டங்களும் கட்டடங்களும் தவிர என்ன அதிசயம் இருக்கிறது. ப்ரமம் வேண்டாம். ஆலையாதிகளை ஏற்படுத்திக்கொடுத்த ஆகமாதி சாஸ்திரம் உண்மையானால் வரம்புகளை 'ஏற்படுத்தின அதேசாஸ்திரம் எவ்விதம் பொய்யாகும்; ஈசன் சர்வஸ்வரூபி; எங்குமிருக்கிறான்; நம்பிக்கையை பாழ்படுத்தவேண்டாம்; ஆலையமென்பது ஈசுவரஞாபகமான ஓர் மஹனீயமான அடையாளமே தவிர வேறில்லை. மந்திராதிகளால் அங்கு ஓர் அத்புசக்தி ஏற்படுகிறது. விபரீதத்தால் ஆலையாதிகள் காக்ஷிபங்களாக்களில் ஒன்றாகும். சர்வேசன் சகலத்தையும் சாக்ஷியாய்ப் பார்க்கிறார். நமக்கேன்கவலை.

உலகில் பஞ்சமாசௌச விஷயமாயும் வாலிவதத்தில் போல் வீண்வாதம் நடக்கிறது, ஸ்திரீகளின் விலக்கான சமயத்திலும் ஜனனமரணகாலத்திலும் ஆசௌசம் கொண்டாடப்படுகிறது போல் ஏற்பட்டிருக்கிறது. தவிர, ஒவ்வொரு சரீரமும் சுக்லசோணிதபிண்டமாயிருப்பதாலும் ஆபாசத்திலிருந்து வெளிவருவதாலும் ஆபாசக்

களஞ்சியமே நெருங்கி தொட்டுப் பேசிக்கொள்வது கூடாது. (241, 242, 243)

குறிப்பு:—தவிர ப்ரதிசரீரத்திலும், குணகர்ம வித்யாசமாய் ஏற்றதாழ்வாக அவையவாதிகள் அமையவில்லையா, அதை மாற்ற முடியுமா, தவிர, ஏற்றதாழ்வாக அபிமானிக்கிறோமா, இதில் ஏன் பகவான் இவ்வளவு வித்யாசம் ஏற்படுத்தி இருக்கிறார் என்ற விஷயம் நமக்குப் புறிகறதா? இல்லை. அதுபோல் ஜாதிமுறையென்பதையும் ஒப்புக்கொண்டு தீரவேண்டும்.

ஆசௌசமுள்ள மனிதவர்க்கத்தின் நிழல் மற்ற மனிதனிடம் சம்பந்தித்தால் அதிலும் சவர்ணர்களிடம் சம்பந்தித்தால் அதன தன் தன்மைக்குத் தக்கவாறு இயற்கையானதார் மிக சக்திகலக்கமாய் குறைவடைகிறது, மனக்கலக்கம் ஏற்படுகிறது. இதர ஜீவகோடிகளின் நிழலும் மற்றமனிதனுடைய நிழலும் அவ்வாறில்லை. (244)

குறிப்பு:—காக்காய் வலம்போச்சுது, கருடதர்சனம் கிடைத்தது; எனக்கு கார்யம் ஜயம்தான் என்று வ்பவஹாரம் செய்யப்படுகிறது. பூனைமுகத்தில் விழித்தேன் சகுனமும் சீரில்லை ஆதலால் கார்யம் நஷ்டமாச்சுது என்றும் வ்யவஹரிக்கப்படுகிறது, சகுன சக்தியை முறையிட்ட சாஸ்திரம்தான் நிழலின் சக்தியையும் முறையிட்டிருக்கிறது. ஏன்நம்பக்கூடாது கிரஹராஜர்களாயும் லோகசாக்ஷிகளாயுமுள்ள சூர்ய சந்திர மண்டலங்கள் இதர சாயாகிரஹசம்பந்தத்தால் கிரஹண காலத்தில் எவ்வளவு ஒழிமழுங்கிறார்கள்; நிழலுக்கா? சக்தியில்லை. தவிர புளியமரம், தாணிமரம் முதலிய மரங்களின் நிழல்கள் எவ்வளவு வ்யாதியை ,உண்டுபண்ணுகின்றன. இதையெல்லாம் அறியாமல் கலஹாஸ்பதமான அக்ரமவாதம், யத்னம், செய்யலாமா.

ஸ்வகுலாசாரத்தை அனுசரித்து நந்தனார் முதலிய நற்குணமுள்ளவர்கள் உலகில் வாழ்ந்து மேன்மை அடைந்ததுபோல் அவர்ணர்களான பஞ்சமவர்கத்தினர் மேன்மை அடையட்டும். (245)

குறிப்பு:—எவ்வளவு குறைவுள்ளதாயிருந்தாலும் தன் மார்க்கத்தில் நடப்பவன் உத்தமன், மற்றவன் கர்மசண்டாளன் இரண்டே

ஜாதியில் உலகை அடக்கிவிடலாம், இதை உதாசீனம் எவனும் செய்ய முடியாது; மாத்திலும், கல்லிலும், ரசத்திலும், ரத்னத்திலும், நமது சாஸ்திரங்களில் குணம் ப்ரயோஜனம் இதையனுசரித்து ஜாதிப்பெயரால் அழைக்கிறார்கள்; ஜாதியையும் அதன் தர்மத்தையும் அசுரனும் அழிக்கமுடியாது. ப்ரஷ்ட ஜாதி என்றுவது அழைக்கப்படுமே தவிர வேறில்லை. உலகம் முழுவதும் அவ்விதம் எப்போதுமாகாது. ஒருவர்க்கொருவர் முறையாய் கேட்டுக் கொள்ளவேண்டியதுதான், முறைப்படி உபகாரம் செய்துகொள்ள வேண்டியதுதான் இது தவிர உஜ்ஜீவிக்க வழிகிடையாது என்பதை இவ்வுலகம் கண்டிப்பாய் அறியட்டும்.

கண்டிப்பாய் அறியமுடியாத சர்வமஹிமையுள்ள சர்வேசுவரன் அவரவர்களின் கர்மவினையை அனுசரித்தும் தனது சங்கல்பப்படியும் பலானரீதியில் தேவாதிவர்க்கமென்றும் ஜராயுஜம், அண்டஜம், உத்பிஜ்ஜம் ஸ்வேதஜம் என்ற ரீதியில் பசுபக்ஷி முதலிய வர்க்கமும் மனுஷ்யவர்க்கமும் இவ்விதவர்க்கங்களிலும் ஏற்றதாள்வாயும் சுகி துக்கீ, தரித்ரன், பணக்காரன், அங்கஹீனன், முட்டாள், அறிஞன், வ்யாதி உள்ளவன், அழகானவன், உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்றும், பிளிப்பு, கசப்பு, திதிப்பு என்றும் அநேக அத்புதமாய் சிருஷ்டி செய்திருப்பதை கண்கொள்ளாக் காக்ஷியாய் அனுபவித்தும் தவிர ஆர்யசமாஜம், பிரம்மசமாஜம், அடையார்கோஷ்டி, காந்தி கோஷ்டி இந்த விபரீதத்தை ஒப்புக்கொண்டும் யோக்யமான ஜாதி முறையை மட்டிலும் பிசகென்று எவ்விதம் வ்யவகரிக்கிறது. (246)

இவ்விதம் ந்யூன திரேகமாய் உலகை ஸ்ருஷ்டிப்பானே என்று கேள்விகேட்டால் சுத்திக்கொண்டிருக்கவேண்டியதுதான் கர்மவிபாகம் மிக மிக சிக்கலானது யாா? ஜவாப் சொல்லமுடியும். (247)

அந்தந்த ஆசாராதிகளை நடத்த யோக்யமாய் ஸ்தலாதி நியமங்களும் உண்டு. (248)

இந்த ரீதியில் கிராம நகரங்களை பெரியோர்கள் அமைத்தார்கள் குலாசாராதிகளை அனுசரித்து தங்களது கிரகங்களிலும் ஸ்வஜாதிஜன மத்தியிலும் தங்களது பொது ஸ்தலங்களிலும் ஒருவர்க்

கொருவர் ஊடாடிக்கொள்ளாமல் தங்கள் தங்களது ஆசாராதிகளை யே செய்தார்கள் தங்கள் தங்களது வீதி ரஸ்தாக்களிலேயே போக்கு வரத்துச் செய்தார்கள். (249 250 251)

குறிப்பு:—ராஜகீயவீதிகளிலும் சர்ஜாதிகளுக்கும் பொதுவான பொதுவீதி ரஸ்தாக்களிலும், கடைவீதிகளிலும் மர்யாதை தாண்ட மாட்டார்கள்.

இதரர்களது பொது ஸ்தலங்களுக்காவது, வீதிகளுக்காவது, வீடுகளுக்காவது போகும்படி ஏற்பட்டாலும் அந்தந்த மர்யாதை தாண்டமாட்டார்கள். (252)

அந்தந்த ஆசாரரீதியில் ஏற்பட்ட வீதியிலுள்ள வீடுகளையும் பொதுஸ்தலங்களையும் காலி இடங்களையும் தம்தமது இனத்தவ ரோடுதான் க்ரயவிக்ரயம் செய்யப்பட்டது. இதுதான் செல்லுபடி யானது. (253)

அந்தந்த கார்யங்கள் நடைபெற அனுகூலமாய் தர்மசாஸநம் செய்யப்பட்ட காடுகழை வயக்காடு வகையறுக்களின் கிரயவிக்ரயங் கள் செய்யப்பட்டது கிடையாது. மீறிநடந்தால் இவை செல்லுபடி யாகாது. (254)

குறிப்பு:—எந்ததர்மம்நடக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதோ அந்தவரும்படியை அதற்காகவே சிலவழிக்கவேண்டும். தர்மம் ஏற் படுத்தியவரின் அபிப்ராயத்துக்குமாருய் எவ்வள்வு உயர்ந்த காரிய மாயினும் மாறுதலாய் உபயோகிக்கக்கூடாது. தர்மரக்ஷகனுக ஏற் படுத்தப்பட்ட புருஷனின் மூத்த ஆண்வார்சு பரம்பரையே, அந்த தர்மத்தை பாதுகார்த்து வரவேண்டும் பங்கிட்டுக்கொள்ளக்கூடாது தர்மரக்ஷகன், ப்ராந்தனுகவோ, ப்ரஷ்டனுகவோ, மஹாரோகமுள்ள வனுகவோ, இருப்பானுனல் அந்த பரம்பரையிலிருந்து தகுதியான வனிடம் பெரியோர்கள் சொல்படி; அதற்கு யோக்யமான மற்ருெரு தார்மிகனிடம் மாற்றிவிடவேண்டியதுதான் இந்த வரம்புடன் முன் னோர்கள் ஆசரித்தார்கள்.

இவ்விதமே குலஆசாராதிகளை அனுசரித்து கிணறுவகையரு ஜல சௌகர்யங்களும் அமைக்கப்பட்டன. குல ஆசாராதிகள் ஒழுங் காய் நடைபெற குளம் நதி முதலியஜலஸ்தானங்களிலும், இது இன் ஞருடைய துரை, இது இன்னருடையது, இது கோவில் துரை, இது அந்த அந்தருத்ரபூமியின் துரை, இது பொதுவான துரை, என்றுவிபாகம் ஏற்பட்டு ஊடாடிக்கொள்ளாமல் ஒழுங்காயிருந்தார் கள். மேன்மை அடைந்தார்கள். (255, 256)

இவ்வித உத்தம வரம்பிற்குக் கட்டுப்பட்டு, தங்களதுகுலரீதி யில் சுகமாய் வாழ்ந்து பரமதீனர்களான, ஆப்தபந்து ஆப்தமித்தி ரன் நல்ல வேலைக்காரன் இவர்களையும் இன்னும் சாமான்யமான பந் துக்களையும் ஜாதியினர்களையும் ப்ராஹ்மணர்களையும் மற்ற ஜாதியி னர்களையும் முறைதவராமல் மர்யாதையுடன் சக்தியானுசாரம் காப் பாற்றினாகள். (257)

குறிப்பு:—ஆப்த பந்துக்கள் எவர்கள்எனில் தகப்பனது முன் ஞேர்கள் தகப்பனது சகோதர சகோதரிகள் தனது சகோதரசகோ தரிகள் தாயின் முன்ஞேர்கள் தாயின் சகோதர சகோதரிகள் குரு வின் பெற்றோர்கள் குருவின் குழந்தைகள் தனது சந்ததிகள் மேற் சொன்ன யாவருடைய ஔரஸ புத்ரபுத்ரிகள் தன் மனைவியாவது தனது சந்ததிகளாவது உயிருடன் இருந்தால் மட்டிலும் தன்மனை வியின் பெற்றோர்கள் தன்மனைவியின் சகோதர சகோதரிகள் அவர் களது ஔரஸபுத்ரபுத்ரிகள் ஞாதிகள் ஆகியவர்கள் சாஸ்திரீயமாய் ஆப்தபந்துக்கள், மற்றப்படியான சகோத்ரர்கள், முன் சொன்ன ஆப்த பந்துக்களின் பந்துக்கள், சாமாண்யபந்துஜனங்களாகிறார்கள். தவிர, முன்சொன்ன ஆப்தபந்துக்களுக்கோ, தனக்கோ தன்ஜாதீய தர்மத்திற்கோ யாவருக்கும் பொதுவான தர்மநீதிகளுக்கோ எவ் வாற்றாலோ பரம ஆபத்து ஏற்பட்ட காலத்தில் ப்ரயோஜனத்தை எதிர்பாராத உதாரபாவமாய் உபகாரம் செய்த உத்தமர்கள்தான் சாஸ்திரீயமான ஆப்தர்கள் ஆப்தமித்ரர்கள். இவர்களை மறக்கவே கூடாது. தவிர தன் ஜாதிஸ்வபாவத்தை மாற்றிக்கொள்ளாமலும் துராசையன்னியிலும் துர்குணமன்னியிலும்மோசக்கருத்து அன்னி யிலும் எஜமான விசுவாசத்துடன் ஒழுங்காய் சார்யும் பார்ப்பவர்கள்

நல்லவேலைக்காரர்களாகிறார்கள். தவிர,ஸ்திரீஜாதிகளுக்கோ வெனில் புருஷனைச் சார்ந்தவர்கள் முதன்மையானவர்கள், பிறகுதான் தன்னைச் சார்ந்தவர்கள் என்பதை அவர்கள் மறக்கக்கூடாது. இவ் விதமறிந்து, இவ்விதமானவர்களோடு விரோதித்துக் கொள்ளாமல் அனுசரணையாய் உபகரித்து காலநயனம் செய்யவேண்டும்.

தவிர, கர்த்ருகிரமவார்சு பாத்யதையன்னியில் பிறன் சொத் துக்கு ஆசைப்படமாட்டார்கள். அது மலபூதமானது, துராசை உல கிற்கு வேண்டாம். (258)

குறிப்பு:—முன்சொன்ன ஆப்த பந்துவகையறாக்கள் வழிதவ ராமல் திருப்தியுடன் அவரவர்களாய் அன்புடன் கொடுத்தால் தங் களுக்கு இஷ்டமிருந்தால் த்ரவ்யாதிகளை பெற்றுக் கொள்ளலாம். பாபமாகாது, ஒருவனுக்குப்பின் அவனது சொத்து கர்த்திருக்ரம மாய் அடையப்படுவதுதான் தர்மந்யாயமென்பது, சாஸ்திரங்களின் அந்தரங்கமான உண்மையான அபிப்ராயம். முக்காலமூன்று லோக சம்பந்தமாய் சநாதனமார்க்கத்தில் சகலமும் அணிவகுக்கப்பட் டிருக்கின்றன. கண்டதேகாக்ஷி கொண்டதேகோலம என்பவர்களுக் கு ஒன்றும் புரியாது. அவர்களைப்பற்றி பெரியோர்களுக்கு அக்கறை யுமில்லை. கர்த்ருக்ரமவிஷயமாய் தர்மசாஸ்திரங்களின நிபந்தனைக் காரர்களுக்குள் பூஜனீயரான வைத்யநாத தீக்ஷிதரின் உத்தம கிரந் தத்தை அனுசரித்து.இங்குஞாபகப்படுத்துகிறேன். ஔரஸபுத்ரன் பௌத்ரன், அவனுடையபுருஷசந்ததீ, (புத்ரிகாபுத்ரன்) (அவன்புருஷ சந்ததீ), தத்தன் அவனுடைய புருஷசந்ததீ, தனஹாரீதௌஹித் ரன், பத்நீ, பதி, சபத்நீபுத்ரன், பெண், சகோதரன், அவனுடைய புத்ரன், அசோதரசகோதரன், அவனுடைய புத்ரன், பிதா, மாதா, நாட்டுப்பெண், பௌத்ரீ, தௌஹித்ரீ, பௌத்ரனுடையபத்நீ, பௌத்ரனுடைய பெண், தத்தனுடையபத்நீ, சகோதரீ, அவளது குமாரன், சபிண்டன், சோதகன், (மாதிருசபண்டன்), (மாதிருசமானோ தகன்), சகோத்ரன், (சவர்ணசிஷ்யன்), (ரித்விக்), (சவர்ணபிருத்யன்), (குரு), (ஆசார்யன்), (சவர்ண சஹாத்யாயீ), மாப்பிள்ளை, (சவர்ண ஆப்த மித்ரன், (ஸ்திரீஹாரீ), (தநஹாரீ), ராஜா என்று சர்வ யுகங்களுக்கும், ஸ்திரீ புமான்களுக்கும் பொதுவாய் கர்த்ருக்ரமம் சொல்லப்பட்

டிருக்கிறது. இதில் ஸ்திரீகளின் விஷயமோவெனில் மேலேசொன்ன வார்சுகளில்; சகோதரன், அவன்புத்ரன், அசோதர சகோதரன், அவன் புத்ரன், பிதா, மாதா, சகோதரீ, அவள் புத்ரன், இவ் விஷயத்தில் புருஷனைச் சார்ந்தவர்கள் முதன்மை யானவர்கள். பிறகுதான் ஸ்திரீகளைச்சார்ந்தவர்கள் என்பதும் சாஸ்திரங்களின் கருத்து, தவிர ஒருவனுக்குப்பின் அவனது புத்ரபௌத்ரக்ரம மான ஆண் சந்ததிவிஷயமாய் அவனது சொத்தில் யாவருக்கும் சம பாத்யதையுண்டு. மற்றவார்சுகள் விஷயத்தில் அவ்விதம்கிடையாது சமமானவர்களுக்கு மட்டிலும் பாத்யதையாகும். உதாரணமாக, தௌஹித்ரபாத்யதை வந்தசமயம் பெண்கணக்கில்கூடாது, எல்லா தௌஹித்ரர்களும் சமானர்களாகிறூர்கள். அவர்களில், தனஹாரீ தௌஹித்ரன் ஒருவன் இருப்பானுனல் அவன் தௌஹித்ரர்களுக் குள் சிறியவனுயிருந்தாலும் அவனே கர்மம் செய்யவேண்டும் மற்ற வர்களுக்கும் சொத்து பாத்யதை உண்டு, சாமான்ய தௌஹித்ரர் களானுல்; வயதில் பெரியவன் செய்யவேண்டும், யாவரும் பங்கிட்டு கொள்ளவேண்டும். தௌஹித்ரர்களில் ஒருவனுக்கு சந்ததிமட்டும் இருந்து அவன் தவரியிருந்தால் அவன் வார்சுக்கு சொத்து பாத் யதை கிடையாது. புத்ரபரம்பரை ராஜபாட்டையானது அதுபோல் மற்றது ஆகாது, தவிர மாதாமஹீ உயிருடன் இருந்தால் அவள் காலம்வரை சொத்தினிடம் யாவரும் போகக்கூடாது; மாதாமஹனு டைய கர்மாவை மாதாமஹீ சொல்படி வயதில் பெரிய தௌஹித் ரன் நடத்தவேண்டியதுதான் மாதாமஹனுக்கு சொத்து இல்லையா யினும்; கனிவுடன் சாஸ்திர ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு, எல்லோ ரும் சேர்ந்து உபகரித்து கர்மாவை நடத்திவைக்கவேண்டியதுதான் சொத்திருந்தால் மாதாமஹியின் காலமான பிறகு அவள்கர்மாவை யும் செய்துதான் பங்கிட்டுக்கொள்ளவேண்டும். இதன்மத்தியில் மாதாமஹிக்குமுந்தி மாதாமஹனுக்கு கர்மம் நடத்திய தௌஹித் ரன் காலமானுலும் அவன்சந்ததிக்குமட்டிலும் மாதாமஹிக்குப்பின் தௌஹித்ரர்கள் பங்கிட்டுக்கொள்ளுகிற காலத்திலும் யதாப்ரகாரம் பங்குண்டு. மற்ற தௌஹித்ரர்களின் சந்ததிக்கு பாத்யதை கிடை யாது; இதேபோல் மற்றதுகளும் என்று தெரிந்துகொள்ளவும் இந்த கர்த்ருக்ரமத்தை சூக்ஷ்மமாக கவனித்தால் ஒருவனுக்குப் பெண்

இருந்து ஆண்சந்ததி இல்லாவிடினும் அவனது பெண் அவனது பாகத்தை அடைவது ந்யாயமாய் தோன்றுவது உண்மையானாலும் மூலபுருஷன் இருந்து குடும்பம் பொதுவாயிருந்தால் பிதா இருக்கும்பொழுது அவனதுசந்ததிகளான சகோதரர்களுக்குள் சொத்து பாத்யதை இறங்காதாதலால் சாஸ்திரீயமாய் இல்லையென்றுதான் சொல்லவேண்டி யிருக்கிறது. ஆனாலும் அவ்வித சகோதரனது பெண்ணை மற்றசகோதரர்களும் மூலபுருஷனும் தன் உயிரினும் பெரிதாய் கௌரவிக்கவேண்டும் கார்யங்கள் நடத்தித்தரவேண்டும் மூலபுருஷன் காலமாய் சகோதரர்கள் பொதுவாய் இருந்தால் அந்த சமயம் அந்த அவனது பெண்ணுக்கு பாகம் அவசியம் உண்டு. இதை மீறக்கூடாது; தவிர, சாஸ்திரீயமாய் ஜீவனும்ச பாத்யதை உள்ளவர்களுக்கு யோக்யானுசாரம் ஒதுக்கித்தான் பாகங்களை செய்து கொள்ள வேண்டும் இவ்விதம் கர்த்ருகிரம பாத்யதையை அனுசரித்து இப்பவும் தாயவிபாகம் நடத்திக்கொள்வது மிகமிக தார்மிகமாகும், தவிர ஒருவனுக்கு சொத்து இருந்தாலும் இல்லாவிட்டாலும் கர்த்ருக்ரமவார்சுகள் கிரமப்படி அவனுக்கு கர்மா நடத்தித்தீரவேண்டும். சொத்துஇருந்தால் பாகித்துக்கொள்ள வருகிறார்களல்லவா, ஆனதால் நடத்தியாகவேண்டும், இல்லையேல் அந்த பாபத்தை சமமானவர்கள் பங்கிட்டுக்கொள்ளும்படி ஏற்படும் என்பதை மறக்கவேண்டாம். தவிர இதில்கண்ட கர்த்ருக்ரம அட்டவணையில் எந்தபெயரில் அடையாளம்கொடுக்கப்பட்டிக்கிறதோ, அவர்கள் சமாசாரம் யுகாந்திரவிஷயமானது. அநாதியாய் ஒருவன் காலமானால், ராஜா, இறந்தவனது குலாசாரத்தை யனுசரித்து யோக்யமானவர்கள்மூலம் நடத்தவேண்டியதுதான் சொத்து இருந்தால், அவனது கார்யத்துக்குசெலவழிந்ததுபோகமீதியை அரசன் மூன்றுபங்காக்கி கர்மாவைசெய்தவனுக்கு 1பாகம் காலமானவனுடைய பொதுவான ஜாதீயதர்மத்துக்கு 1 பாகம், ராஜா ங்கத்துக்கு 1 பாகம், இவ்விதமாய் எடுத்துக்கொள்ள வேண்டும். ஒரு ஜீவன் சம்பந்தமாய் கருணையுடன் இவ்விதம் ஏற்படுத்தியிருக்கிற சநாதன தர்மத்தின் மஹிமையை யாரால் சொல்லிமுடியும் இது தவிர தேச ராஜ்யவிஷயகமான பாத்யதையோ வெனில் அநேகமாக தர்மரக்ஷகரீதிதான்.

இதுபோல் மற்றதுகளையும் சாஸ்திரீயமாய் பெரியோர்கள் சொல்படி அடைந்து அனுபவிப்பதுதான் தார்மிகமாகு மென்பதை மறக்கவேண்டாம்.

தவிர, முன்னிருந்தவர்கள் கிருத்ரிமசுக சாதனங்களைத் தங்களுக்கு அத்புதமாய் செய்ய சக்தியிருந்தாலும் ரக்ஷா குணமாவதாலும் ஆசுரமானதாலும் அவசியம் விலக்கியிருந்தார்கள் ஆதலால் சினிமா, மோட்டார் முதலிய சுகசாதனங்களை உண்டு பண்ணிக் கொள்ளவில்லை; யந்திரோத் பன்னங்களான சுகம், இந்திரியங்களின் பாடவத்தைக் குறைக்கும். தேஜசு, பலம், சொத்து முதலியவை சீக்கிரம் குறைவடையும் அதிகமென்ன. ரோகதாபாதிகளுக்கும் பாபத்துக்கும் காரணமாகும் ஆயுசைக்குறைக்கும். தனது நிழலையே அதிகமாய் பார்க்கக்கூடாது. மற்றவனது, குணம் கெட்டவனது, வேஷம் போட்டவனது, அதார்மிகனது; நிழலை எப்படிப் பார்க்கலாம். இதுபோல் சகல யந்திர சமாசாரங்களின் குற்றத்தை அறிந்தவர்களானதால் ஜனங்களுடைய, தர்மத்தினுடைய சேதகரமான அந்தயந்திரங்களையும், யந்திரோத்பன்ன சுகங்களையும் உண்டு பண்ணினார்களுமில்லை. அனுபவித்தார்களுமில்லை. என்பதை கண்டிப்பாய் இவ்வுலகம் இப்போதுமறியவும். (259)

சம்பத்து, போகம் முதலியவற்றின் கொழுப்பில்லாமலும், க்ரூரகுணமில்லாமல் தயவுடனும், தானதர்மவ்ரதபரார்களாயும், ஔதார்யாதி குணங்களுள்ளவர்களாயும், ப்ரகாசித்து அதிதி சத்காரமும் செய்தார்கள். (260)

வித்யார்த்திகளுடையவும் யதிசிரேஷ்டர்களுடையவும் பரிபாலனம் மிக ஆதரவுடன் செய்யப்பட்டது. (261)

ஜிதேந்திரியர்களான அவர்களால் தம்தமக்கு யோக்யமான வ்யவசாயம் வரையுள்ள சர்வகார்யங்களும் ஒழுங்காய் செய்யப்பட்டன. (262)

கிராம நகரங்களில் அதது ஒழுங்கய் நடைபெற அததற்கு தகுதியாய் தார்மிகசபையும் ராஜகிய சபையும் ஏற்படுத்தப்பட்டன. முக்கியமான தார்மிகசபைகளில் சாந்தமான வழியில் அந்தந்த தர்

மம் விருத்தியடைய அததற்கு யோக்யமான ப்ராஹ்மணர்களை முன் னிட்டுத்தான் ஆலோசனை செய்தார்கள். (263, 264)

ஸ்வப்ரஜைகளின் க்ஷேமத்தைக் குறித்து அக்ஷராப்யாசம் முதல் சர்வ உபதேசங்களுக்கும் தர்மந்யாயாதிகளைத் தெரிவிப்ப தற்கும் அததற்குத் தகுதியான ப்ராஹ்மணர்களையே அரசர்கள் நியமித்தார்கள். (265)

குறிப்பு:—உத்தியோகாதிகளுக்காக பிராம்மணர்களும் பறக்க மாட்டார்கள். ஒதுங்கிக் கொடுப்பார்கள். கலகம் செய்யமாட்டார்கள் ஒப்புக்கொண்டு நடத்துவதிலும், ஸ்வாசாராதிகளையும், மர்யாதை யையும், தாண்டவே மாட்டார்கள். தன் ஆசையை மறந்து உபகரிப் பார்கள். அரசர்களை பொதுக்கார்யங்களுக்கு விரையம் செய்ய சொல்லுவார்கள். இதேபோல் மற்றப்பிரதேசத்தவரும் ஏதோ தங் கள் ரீதியில் தங்களையும் ஒருவிதமாய் அணிவகுத்துக்கொண்டு சுகமடைந்தார்கள்.

இவ்விதம் அந்தந்த கார்யம் நடைபெற அததற்குத் தகுதியா னஜாதியினர்களிடமும் அதிகாரம்கொடுக்கப்படும். அததற்கு யோக் யமான தானமோ, தர்மமோ, சன்மானமோ, சம்பளமோ, அரசர்கள் கொடுத்து ஆதரித்தார்கள். சக்தியுள்ள ப்ரபுக்களும் விநியோகித் தார்கள், யாவரும் மேன்மை அடைந்தார்கள். (266)

மேலே சொன்ன சகல கார்யங்களும் மோதாமல் ஒழுங்காய் நடைபெற நதிகளை அனுசரித்தும், மலைகளை அனுசரித்தும், பூமி யின் இயற்கையமைப்பை அனுசரித்தும், பாஷாதிகளையனுசரித்தும் தேசங்கள், உள்பட்ட ராஜ்யங்கள், தலைநகர்கள், பட்டணங்கள், சாமான்யப்பட்டணங்கள், தலைகிராமங்கள், உள்கிராமங்கள், பட்டி தொட்டிகள் இவ்வித விபாகங்கள் செய்யப்பட்டன. (267, 268)

குறிப்பு:—க்ராமாதிகாரி, பட்டணாதிகாரி அரசர்களால் ஏற் படுத்தப்பட்டு, ஆண்வாரிசு மூத்த பரம்பரையாகவே இந்தக்ரமம் நடந்து வரும்படிசெய்து அந்தந்த ராஜ்யங்களிலுள்ள அரசர்களும், தேச மஹாராஜாதி ராஜர்களும், சக்ரவர்த்திகளும், மேலே சொன்ன கிராமாதிகளில் அததற்குத் தகுதியான பஞ்சாயத்து சபைகள் ஏற்

படுத்தி, அதற்குஅவர்களேயே தலைவராயிருக்கச்செய்து பெரியோர்களான மந்திரிகள் சொல்படி ராஜ்யபரிபாலனம் செய்தார்கள். தர்ம தேவதை, உலகை கருணையுடன் ரக்ஷணை செய்தாள்.

அரசர்களும் மனுநீதி தவருமல் பரிபாலித்தார்கள். அரசர்களுக்குள் தர்மாதிகன் எவனே அவன் மஹாராஜன் என்றழைக்கப்பட்டான். (269, 270)

அரசர்களுக்குள் பரஸ்பரம் வ்யவஹாரம் யேற்பட்டாலும் கலகம் வந்தாலும் சட்டங்கள் தார்மிகங்களானதால் ஜனங்களுக்கு கலக்கம் ஏற்படமாட்டாது. (271)

சமுத்ரம் சூழ்ந்த வையகத்தை எவன் ஒழுங்குதவராமல் வசப்படுத்துகிருனே அவன்தான் சம்ராட் அதாவது சக்ரவர்த்தி. (272)

சர்வ அரசர்களும் ஜனங்களும் லோக க்ஷேமத்தைக் கருதி தர்ம, கோ, ப்ராஹ்மண பக்தியுள்ளவர்களாயிருந்தார்கள். (273)

ஏனெனில் அவ்வித பக்தியால்தான் சர்வேசன் அனுக்ரஹம் செய்கிருர் இல்லையேல் இல்லையே என்ற ரகஸ்யமறிந்தவர்கள். (274)

குறிப்பு:— எவ்வாற்ருலோ தங்களுக்குக் கிடைத்த இந்த புண்ய பூமியாம். பரத தேசமாகிற: சநாதந தர்மம் ப்ரகாசிக்கவேண்டிய இந்தியா நமது பாக்யத்தால் நமக்கு கிடைத்திருக்கிறது என்று உள்ளபடி ஆலோசித்து நமது மாக்ஷிமை தங்கிய சக்ரவர்த்தி அவர்களும் பிரிட்டிஷ் கவர்மெண்டும்: இவ்வழியாய் இந்த தேசத்தை முன்போல் சீர்படுத்தி அரசாக்ஷி புரிந்தால் இன்னும் வெகுகாலம் மேன்மை யடையலாமென்பதை மிக மிக ராஜபக்தியுடன், முன் தெரிவித்துக்கொண்டதுபோல் இந்திய கவர்மெண்டு மூலம் மாக்ஷிமைதங்கிய பிரிட்டிஷ் சக்ரவர்த்தி அவர்களுக்கும், அவரது கவர்மெண்டுக்கும் மிக வணக்கத்துடன் பிரிட்டிஷ் ப்ரஜையும் சநாதனியுமாகிய நான் இந்த கிரந்தத்தின் மூலமாய் லோக க்ஷேமத்தைக் கருதி சிவனது ஆக்ஞைபால் தெரிவித்துக்கொண்டேன் என்பதை உலகம் அறியட்டும்,

உலகில் எந்த அரசர்களும் தர்மாஸ்திவாரமாக ராஜ்ய பரிபாலனம் செய்யவேண்டும் தவிரனுல் சர்வேசன் ப்ரசாதம் செய்ய மாட்டார். தர்ம ரீதியால் ப்ரசாதம் செய்கிறுர். இவ்விதமிருப்பதால் இவ்வித கேள்வி கேட்கக் கூடாது அதாவது சர்வேசன் பரிபூர்ணனல்லவா தயவு செய்தல், கோபித்தல் முதலியதை பிரித்து பிரித்து என் செய்கிறுர் என்று கேட்பது தகாது நிர்விசேஷப்ரம்மமேதான் அவர். சம்சயமில்லை லோக சமாசாரங்களால் அவருக்கு குறைவோ திருப்தியோ ஒன்றும் கிடையாது நித்ய திருப்தர்தான் நித்ய மங்களமூர்த்திதான் சந்தேகமில்லை ஆயினும் தன்னை தன்னிடத்தில் தன் மஹிமையால் பிரதி பிம்பிதராய்: சர்வேச பதத்தில் ஏற்படுத்திக்கொண்டிருக்கிறுர். பிறகு தன் லீலா விநோதத்தற்கு: சட்ட திட்டங்கள், அதிகாரிகள், ஜீவகோடிகள். அமைத்திருக்கிறுர். ஆனதால் தர்மீயாகிறுர் ஆனதால் பாப பாபிகள் விஷயம் சூர்ய காந்தக் கல்லில் ப்ரதிபலித்த சூர்யகிரணம்போலும் புண்யம் புண்யபுருஷர்கள் விஷயமாய் சந்திர காந்தக்கல்லில் ப்ரதிபலித்த சந்திரகிரணம் போலும் தனக்கு யாதொரு சம்பந்தமில்லாவிடினும் தன் ஸ்வரூபத்திற்கு எவ்வித நஷ்டமில்லாமலும்: நிக்ரஹாநுக்ரஹம் செய்துகொண்டு சாச்வதமாய் ப்ரகாசிக்கிறுர் என்பதை இவ்வுலகமறியட்டும். (275)

பிராஹ்மணர்களும் லோகக்ஷேமத்தைக்கருதி, சுருதி, ஸ்மிருத்யுக்தமான தார்மிகர்களாகவே இருந்தார்கள். அதற்காகவே யோக வைபவமுள்ளவர்கள் தவிர மற்ற தார்மிகர்களான ப்ராஹ்மணர்கள் இப்புண்யபூமியிலேயே இருந்தார்கள். (276, 277)

(குறிப்பு:—தார்மிகப்ராஹ்மணர்கள் சமுத்ரதாரணம் செய்யவே மாட்டார்கள். மற்ற சநாதனீய ஜாதிகளும் கடல்தாண்டமாட்டார்கள். ஆயினும் லோகரீதியில் போய்வந்தாலும் வந்தபின் ப்ராயச்சித்தம் செய்துகொண்டார்கள்.)

ப்ராஹ்மணர்கள் யாவரும் காயத்ரியாதி மஹாமந்திரசித்தி உள்ளவர்களாக இருந்தார்கள். உலகம் பஞ்ச பூதாத்மகமாயிருப்பது பற்றி, பஞ்சதேவதோபாசனை செய்தார்கள். (278, 279)

சாதுர்வர்ண்யத்தவரும் அனுலோமர்களுமாகிய சநாதநிகள் தம் தமது குலாசார தர்மகர்மாக்களையே செய்தார்கள். (280)

தவிர, ப்ரதிலோமர்களும் பாஹ்யர்களும் சர்வஜனங்களும் சுக முள்ளவர்களிடம் ஸ்நேக பாவத்தையும் துக்கமடைந்தவர்களிடம் கருணையையும், நல்லது செய்கிறவர்களிடமும் நல்ல கார்யத்தினிட மும் அன்பும் சந்தோஷமும், கெட்டவர்களிடமும் கெட்ட கார்யங்க ளிடமும் நெருங்காம லிருப்பதையும் தங்கள் மனதில் பழகிக் கொண்டு தர்மவிரோதமன்னியில் கீர்த்தியாய் வாழ்ந்தார்கள். (281)

மாதிரு, பிதிரு, குரு தேவதாபக்தியுடன் வாழ்ந்தார்கள். மித மாயும் ஹிதமாயும் உண்மையாயும் இனிமையாயும் கர்வமில்லாமல் முன் கூடியும் தர்மாவிரோதமாய் ஒருவருக்கொருவர் பேசிப்பழங்கிக் கொண்டார்கள். அவ்விதமே, அரசன் விஷ்ணு ரூபியாகிறான். ஜனங் களும், நாராயணனது விலாசங்களே, என்றுமாக: பரஸ்பரம் ஆதர வுடன் இருந்தார்கள். (282, 283, 284)

இவ்விதம் மேலே சொன்ன தார்மிகமான சர்வவிஷயங்களிலும் மர்யாதை தாண்டப்பட்டால் எவனாயினும் சரி அம்மனிதன் சர்வ பாஷண்டனாகிறான். அவனவன் அந்தந்த குற்றத்திற்குத்தக்க வாறு தண்டிக்கப்பட்டான். இவ்வித ரீதியால் துற்குணங்களும் கொடியவர்களும் சர்வாத்மனா அடங்கி உலகம் ஜாஜ்வல்யமாக முன் காலம் ப்ரகாசித்தது என்பதை, ஒவ்வொருவரும் இப்போதும் ஞாப கப்படுத்திக் கொள்ள வேண்டும். முன்னேறலாம், சம்சயமில்லை. (285)

(குறிப்பு:—இதுகளையெல்லாம் கருத்துக்கொண்டுதான் நமது சநாதநீய ராஜகீய சாஸ்திரங்களில் தனித்த ஏகாக்ஷியும் கொடுங் கோலாகும். ஜன சமுதாய ஆக்ஷியும் சிதறுண்டு நானாப்ரகாரமாய் அழியும். தார்மிகர்களும் அததில் சாமர்த்தியமுள்ளவர்களும் லோக கைங்கர்யமே ஜன்மசாதகமானது என்ற உத்தம ப்ரக்ஞை உள்ள வர்களும் சர்வ சமாசாரங்களையும் உள்ளபடி அறிந்தவர்களும் மஹ நீயர்களுமான மஹான்கள் பெரியோர்கள் சமர்த்தர்கள் அடங்கிய,

சூரர்கள் அடங்கிய, அந்தந்த குணமுள்ள ஜனத்தலைவர்களடங்கிய, உத்தம மந்திரிசபைக்குக் கட்டுப்பட்டு உள்ளபடிமரியாதைசெய்யும் அரச ஆக்ஷியே எப்போதும் உலகிற்குநலம், என்று அடிக்கடி மேற் கண்ட சாஸ்திராதிகள் உத்கோஷிக்கின்றன. தற்காலம் ராஜகீய மான சபைகளுக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிற ஓட் சிஸ்டம் மிக அனர்த்தகரமானது, ஆபாசமானது. சம்பந்தமில்லாதவன் சம்மந் தமில்லாத கார்யத்துக்கு ஜனப்ரதிநிதியாம். இது என்ன, குரங்கு கூத்தாகிறது, இது உதவாது. ஒவ்வொரு சபைக்கும் அததில் சம்பந்தமான சமர்த்தர்களால் அனுப்பப்பட்டால் ஜனப்ரதிநிதியாக ஆகும். உத்தம சபையில் ப்ரேரோபணை கொண்டுவருகிறவர்களும் தாங்கள் எது விஷயமாய் ப்ரதிநிதியோ அந்த சமாசாரங்களையே கொண்டுவரவேண்டும். தர்மநீதி தவருது பேசவேண்டும், தன்னைப் போன்ற மற்ருெரு ப்ரதிநிதி உயர்ந்த ரீதியில் சொல்வதை ஒப்புக் கொள்ளவேண்டும். அந்தந்த சமாசாரமாய் அந்தந்த ப்ரதிநிதிகளே பேசவேண்டும். ஓட் கணக்கெடுப்பதிலும் அவ்விஷய சம்பந்தமான வர்களே கொடுக்கவேண்டும். ஒருவர் கொண்டுவந்த ப்ரேரோப ணையை கணக்கெடுத்ததில் குறைவானுலும் அதை கௌரவப் படுத்தவேண்டும்.

அந்தந்த கார்யங்களுக்குத் தகுந்த முறையில் தர்மரீதியில் பத்ரிகாலயங்களும் பத்ராதிபர்களும் ஏற்படவேண்டும் வழிதவாது உலகில் ப்ரசாரம் செய்யவேண்டும். தவிர, தர்மாசார விஷயமாய் யாருக்கும் மாற்றவோ, குறைக்கவோ, கண்டபடி எழுதவோ, பேச வோ, அதிகாரமில்லை யென்பதை உணரவேண்டும். இந்த ரீதியில் ஓட்கொடுத்தல், சபைஏற்படுத்தல், ப்ரசாரப்படுத்தல், என்றுயோக் யமாய் ஏற்பட்டால், அதேபோல் பத்ரிகைகள், பத்ராதிபர்கள்சட்ட ரீதியில் தார்மிகமாய் சீர்திருத்தப்பட்டால், உலகம் முன்னேறும். இவ்விதம் இல்லாமல் யாரும் ஓட் கொடுக்கலாம். யாரும் பேசலாம், எதையும் கொண்டுவரலாம், எதையும் எழுதலாம், ப்ரசுரிக்கலாம், உபந்யாசம் பண்ணலாம் என்றும், இதுதான் ப்ரஜாசம தர்மமென் றும் ஊளையிடுவார்களானுல், சர்வசமமாக மனிதவர்கம் சீக்கிரமாய் விடும். அதாவதுமிருகப்ராயமாகும். தார்மிகஉலகமே? நீமயங்காதே

சர்வேசுவரன் உன் சமீபமிருக்கிறார். உன் பேரில் ஒரு விரல் மற்ற ஆபாசம் போடுமானால் அந்த ஆபாசத்தை அதோகதியாக்கிவிடுவார் ஹேர்? பாரததேவி? நீ பயமடையாதே. தவிர தர்மத்தை அஸ்திவார மாக நம்பாதவர்களும், விபரீதமார்க்கத்தை விரும்புகிறவர்களும், எல்லாம் ஒன்றென்பவர்களும், லௌகிககார்யம் நிஷ்கர்ஷை செய்ய, ஒட்சிஸ்டம்ஏற்பட்டிருப்பதபோல் தர்மசாரவிஷயமாயும்ஒட்கணக்கெடுக்கப்படவேண்டியதுதான் என்று உளருகிறவர்களும், எல்லாம் சம தர்மம்தான் என்றும் அதுதான் சாஸ்திர சம்மதமென்று அக்ரம மாய் அதார்மிகமாய் கத்துகிறவர்களும், காலக்கொடுமையின் ஸ்வரூபங்கள். ஆதலால் அவர்கள் தார்மிகர்களை மடிசிஞ்சி, முண்டம், பிண்டம், குடுக்கை, பொசுக்கணும்; கோணிப்பையில் கட்டி வங்காளக் குடாக்கடலில் எரியவேண்டும் என்று இன்னும்ஏதேதோ தெரியாத் தனமாய் உளருகிறார்கள். வாயினால் எதை வேண்டுமானாலும் சொல்லட்டும் தார்மிகர்களுக்கு கவலை கிடையாது ஆயினும் செய்கையில் விபரீத நெருக்கடி செய்வதால் அவர்களும் திருந்தட்டுமென்று கொஞ்சம் சொல்லவேண்டி வருகிறது, அதாவது சூரியன் ஒன்றுதான். நக்ஷத்ரங்கள் பல. எதற்கு? ப்ரகாசம். குப்பகூளங்கள் மலைபோல் குமியட்டும் கஸ்தூரியாமா? கலப்புகள் விருத்தியானால் தடபுடலாய்காட்டும். சீக்ரம் எல்லாமழியும். ஏன்? அதுவிஷமாகும். தர்மாசார விவேகம்தான் அமிர்தமாகும். அதுதான் அஸ்திவாரம். அப்போதுதான் எல்லாம் ப்ரகாசிக்கும் விருத்தியாகும். அரூபமான ப்ரஹ்மம்சர்வசமம். அதற்கும் அவ்வழிலாயக்கானவர்களுக்கும் ஒன்றும் கிடையாது. எல்லாம் ஒன்றுதான் மற்றப்படியானவர்களுக்கு தார்மிகமாய் தெளிவடைதல் அவசியம். உதாரணமாக ஒரு ஸ்திரீ அவளது குடும்பத்தில் யாவருக்கும் வழியாய் வேண்டியவளேதவிர விபரீதமாய் வேண்டியவளாவாளா? அதுமுறையா, இக்கசடர்கள் இதைஒப்புக்கொள்வார்களா? அதுபோல்தர்மாசாரவிஷயம் மாற்றப்படக்கூடாது என்றும்ஒருவர்க்கொருவர் ஊடாடாமல் எல்லாம்சமம் என்றுஉளராமல், வழியாய் ஆதரித்தாகவேண்டுமென்றும், மற்றது கெடுதல் என்றும் இக்கசடர்கள் தெரிந்துகொள்ளட்டும். தீவட்டித் தனமாய் ஹிம்சைக்கு அதிகம் ஆரம்பித்தால் ஹே! தார்மிக உலகமே நீ கலங்காதே தெய்வ வரம்பெற்ற பலமுள்ள கொழுப்பால்

வெகு ஹிம்சைசெய்த அசுராதிகளாலும், தர்மத்தை தார்மிகரை அசைக்க முடியவில்லை, அசைக்கவும் முடியாது நீ மயங்காதே.

அக்காலமிருந்த மதாசார்யர்களும் யதீசுவரர்களும் அந்தந்த ஜனக்ஷேமத்தைக் குறித்து க்ஷேத்ராடனம் செய்தார்கள். ஜனங்களுக்குத் தக்கவாரு உபந்யசித்து ஆத்மஞானாதிகளையும் உபதேசித்தார்கள். (286, 287)

அவர்களைப் போலவே குருபக்தியுடன் பால்யம்முதல் அப்யசித்து பெரியோர்கள் அனுமதித்த அந்தந்த விஷயங்களையே அவரவர்கள் பேசினார்கள். அதற்கு சம்பந்தமான ஜனங்களிடமே பேசினார்கள். (288)

இவ்விதம் முன்னிருந்தவர்கள் யோக்யமாய் நடந்து சர்வசௌபாக்யங்களுமடைந்தார்கள். (289)

அதிகம் வளர்ப்பானேன். ஜீவன் முக்தர்களாய் பிரம்மாநந்தமே அனுபவித்தார்கள். (290)

ஸ்வதர்மத்தை இவ்விதம் ப்ரகாசப் படுத்துகிற இந்த கிரந்தத்தை யாவரும் பார்க்கட்டும். (291)

ஸ்வாசார தர்மகர்மரீதியிலிருக்கட்டும். இவ்வாற்றால்தான் சித்தசுத்தியாகும் இல்லையேல் இல்லையே. (292)

சித்தசுத்தி உண்டானமேல் ஈஸ்வரானுக்ரஹம் உண்டாகும். (293)

கிடைக்க அறிதான சத்குரு தர்சனம் ஏற்படும். (294)

இந்த சமயம்தான் அவரது சதுபதேசம் மனதில் பதியும். (295)

குரு கடாக்ஷமன்னியில் ஞானபதவியடையமுடியாது. (296)

அக்ஷராப்யாசம் முதல் அந்தந்த போதகர்களும் அஷ்டாதச வித்யாபோதகர்களும் மந்திரோபதேசம் ஹிதோபதேசம் செய்தவர்

களும் பிரம்ம வித்யையாகிற ஞானோபதேசம் செய்கிறவரும் குருக்கள்தான். (297)

சக்தியானுசாரம் அவர்களுக்கு சந்தோஷம்வரும்படி சிசுரூஷை செய்து காணிக்கைகொடுத்து சந்தோஷப்படுத்தி அவர்களை உபாசிக்கவேண்டியதுதான். ஆயினும் ஞானோபதேசம்செய்த மஹாகுரு சந்நிதானத்தில் பரமபக்தி செலுத்தி உபாசிக்கவேண்டும். (299)

ஸ்வரூபானுசந்தானமுள்ள அம்மஹான் உபதேசித்த வழியில் நம் மனதை லயமடையச் செய்வதே. அவருக்கு நாம் பரமபக்தி செலுத்துவதாகும். (300)

வைதிகாசாராதிகளை கலக்கம் செய்கிறவன் மஹாத்மாவாக மாட்டான். மஹாதமஸ் உள்ளவனுவன். (301)

தன்னை அண்டினவர்களை தன்னைப்போல் செய்யும் மஹானுக்கு சமம் அல்லது உயர்ந்தது என்ற மற்றொரு வஸ்து கிடையாது. (302)

அம் மஹாத்மாவே பரமசிவன். பரமசிவனே அம்மஹான். (303)

சிவகிருபையும் குருகடாக்ஷமும் எப்போது ஏற்படுகிறதோ அப்போதே பரமஞானி. (304)

அப்போதுதான் ஜீவன் முக்திப்ரதமான மஹாவாக்யம். ஸ்வானுபூதியில் அறியப்படும். (305)

அப்போதுதான் ஜீவத்தன்மையிலிருந்து தேஹீ விடுபடுகிறான். (306)

ஆத்யந்திகதுக்க நிவிருத்தியேற்படுகிறது. பரிபூர்ணனுகிறான். (307)

ஆனதால் இவ்வுலகம் மனதில் அத்வைத பாவனைகொண்டு, பாபம் நீங்கி சித்தசுத்தி ஏற்படவும் அதன்மூலம் ஆத்மஞானம் உதயமாகவும் ஸ்வரூப சித்தி அடையவும் ஸ்வாசாரத்தில் இருக்கட்டும்; என்றிவ்விதமாய் இந்தக்ரந்தத்தில் சொல்லியவாறு மனதில்

அடிக்கடி இவ்விஷயங்களை பதியவைத்தலால் புத்தி தெளிவு ஏற்பட்டு ஸ்வாசார தர்மகர்ம மார்க்கத்தில் சிரத்தாபக்தி உண்டாய் அனுஷ்டித்து மேன்மையடையலா மாதலின், இந்த க்ரந்த ஞானத்தையும் ஸ்வதர்மாசரணமாய் பெரியோர்களறிகிறார்கள். (308)

உள்ளபடி ஒன்றும்கிடையாது. எல்லாம் இயற்கையே எல்லாம் அழிவுள்ளதே சாச்வதமென்பதே கிடையாது. சூன்யம்தான் மீதமாகிறது; மற்ற இவ்வித மூட்டையெல்லாம் தன்னலம் பாராட்டும் புத்திகூர்மை உள்ள சிலரால் உண்டுபண்ணப்பட்டு உலகம் மோசம் போச்சுது. உள்ளபடி ஒன்றும் கிடையாது. சூன்யம்தான் என்று வாதாடும் நாஸ்திகன் சநாதனிக்கு மிகமிக உபகாரி. உலகம் மித்யை என்பதை லௌகிகதர்க்கரீதியிலே அநாயாசமாய் நிர்தாரணம் செய்கிறான். ஆனால் தன் அகந்தை குறையாத குற்றத்தால் துரபிமானத்தால் தன்னைபோலவே மற்றவர்களும் இருக்கக்கூடு மென்று தன்னிடமுள்ள கபடாதி துர்குணங்களை மஹாங்கள் பேரில் ஏற்றி ஸ்வோதாம்பரியாய் அந்யாயமாய் படுகுழியில் விழுகிறான். ஒன்றுமில்லையென்று வாதாடி ஒன்றுமில்லாமல் அவன் திண்டாடுகிறான். அவனது சரீரத்தாலேயே அவனை வழிக்குக் கொண்டுவந்துவிடலாம். ஸ்வப்நதிருஷ்டாந்தம் ஒன்று போதாதா? இவ்விதம் அறிகிறது யாரப்பா என்று கேள்விகேட்டால் போறாதா? சூன்யம் சூன்யத்தை அறியுமா என்றுகேட்டால் போதாதா. இவ்வித கேள்விகளால் அவனும் சீர்படுவான். ஆஸ்திகனுவான் த்வைதரீதியில் அத்வைதாபிமானத்தை மனதில் அடைந்து ஸ்வாசாராதிகளை ஒப்புக்கொண்டு அனுஷ்டித்து அவனும் முன்னேறுவான். இவ்விதம் பூஜனீயமான நம் சநாதன மதமே சர்வகாரணம், என்பதை உலகினர் அறியட்டும். (309)

சச்சிதாநந்தாநந்தப்ரம்மவஸ்து ஆகாசம் போல், தான் நிர்மலமாயும் நிர்விகாரமாயும் இருந்துகொண்டு, தனதுமஹிமையால் இந்த யாவற்றையும் தன்னிடமே தோற்றுவித்து, தானே காரணமாய் தான் சம்பந்தப்படாமல் சர்வ சாக்ஷியாய் சர்வ ப்ரேரோபகராய் சர்வேசனுய் பிரகாசிக்கிறது. அதுவே நான் நானே அது ஓம்.

இவ்வித உத்தமப்ரஞ்ஞயை ஸ்வதர்மா சரணமாக பெரியோர்கள் அறிகிறார்கள் (அவ்விதமே சொல்லுகிறார்கள்.) (311)

ஓம் ஓம் ஓம். ஓம் சத்யத்தைக் காட்டிலும் மற்றொரு மார்க்கம் கிடையாது. ஸ்வாசாரத்தைக் காட்டிலும் மற்றொரு மித்ரன் கிடையாது. பரம குருவைக் காட்டிலும் மற்றொரு தேவதையும் கிடையாது. இம் மூன்றைக் காட்டிலும் ஆத்மஞானம் அருள்புரிய மற்றொன்றும் கிடையாது. (312)

தற்காலம் காலபரிணமத்தால் எல்லாம் விபரீதமாயிருக்கிறது. காலத்தின் கதிவக்ரமல்லவா? (313)

இவ்வித சமயத்தில் பகவான் தர்மத்தை ரக்ஷிக்க தன்வாக்யப்படி சீக்கிரம் விஜயமாகிருர். (314)

எனது பாக்ய விசேஷத்தால் சென்ற ஆனந்த வருஷம் தைமீ கார்த்திகை யன்றையதினம் ராத்திரி சுமார் 8-மணிக்கு ராமேச்வரத்தில் ஸ்ரீ ராமனுதனது சந்நிதானத்தில் பெரிய நந்தியின் சமீபம் எனக்கு திவ்ய புருஷ சந்தர்சனம் கிடைத்தது. (315)

தர்மஸ்தாபனர்த்தம் உலகில்தான் விஜயம் செய்ய சங்கல்பித்திருப்பதாயும் இது முதல் பலான கொந்தளிப்புடன்தான் உலகமிருக்குமென்றும் தனது அவதார சமயம் கலி 5045-ஸூத்திலிருந்து என்றும் இதை உலகினருக்கு அறிவித்திடு என்றும் அவர் ஸ்ரீ ராமனுதனது சந்நிதானத்தில் அந்த சமயம் அனுக்ரஹம் செய்து ஆக்ஞாபித்தார். (316)

அவரது ஆக்ஞாப்ரகாரம் இந்த புண்யபூமியில் கங்கா, சிந்து, நர்மதை, காவேரீ நதிகளின் தீரங்களிலும் கோளத்திலும் பஞ்சாயதனப்ரதிஷ்டை அவசியம் செய்யவேண்டும். (317, 318)

அந்தசமயம் ஏற்பட்ட இவ்வித ஆக்ஞையை அப்போது ராஜப்ரதிநிதியாயிருந்த லார்டு ஹார்டிஞ்சுதுரை அவர்களுக்கு தெரியப்படுத்தி யிருக்கிறேன். அவரது பதிலேயும் வைத்துக்கொண்டிருக்கிறேன். (319)

அப்படியே இந்த க்ரந்தத்தின்மூலம் இப்போது, மர்யாதையுடனும் மாக்ஷிமைதங்கிய இராஜ ராஜாக்களிடத்தும், அங்கங்கு அந்தந்த

மஹிமையுள்ளபீடங்களில் த்யானபராளாயிருக்கும் பூஜ்யபாதாளான லோகாசார்யர்களுடைய மஹா சந்நிதானங்களிடமும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்; பூஜிக்கத்தகுந்த அவர்களும் லோகக்ஷேமத்தைக் கருதி அவ்வித ஆக்ஞையை உலகில் அவசியம் நடத்த வேண்டியது தான் என்று ப்ரஜைகளுக்கும் சிஷ்ய ஜனங்களுக்கும் ஆக்ஞையிடுவார்கள் என்று நம்புகிறேன். (320, 321)

எந்தக்ராமத்தில் பிறந்ததால் சர்வேசானுக்ரஹம் ஏற்பட்டு இவ்விதக்ரந்தம் எழுதும்படி எனக்கு சக்தி ஏற்பட்டதோ அந்த எனது உத்தம கிராமத்தின் மஹிமையையும் அவரது ஆக்ஞையால் தெரிவித்துக் கொள்ளுகிறேன். (322)

ஸ்ரீ ஹாலாஸ்ய க்ஷேத்ரத்துக்கு மேற்கு பாகத்தில் கொடைக்கானல் என்று ப்ரசித்தியடைந்த ஸ்ரீ வராஹமலை ஒன்று இருக்கிறது. அதன் மஹிமையை யார் வர்ணிக்க முடியும் ஸ்ரீ வராஹ பகவானின் திவ்யசரீரமல்லவா? தவிர மிகமிக சோங்கான அம்மலையின் இருபார்சுவபாகத்திலும் தண்டிபாணீ என்றும் பாலஸ்வாமீ என்றும் ஸ்ரீ சுப்ரமண்யர் எப்போதும் ப்ரசன்னமாயிருக்கிறார். ஆனதால்தான் அப்பர்வதத்தில் தனது உற்பத்திக்குக் காரணமான கும்பத்தின் பெயரால் கும்பேசுவரலிங்க ப்ரதிஷ்டை ஸ்ரீ அகஸ்திய மஹரிஷி செய்திருக்கிறார். இதிலிருந்துதான் யமுனம்சையான ஸ்ரீ வராஹநதீ புண்யமாய் எப்போதும் ப்ரவகிக்கிறது. சைத்ரமாசத்தில் இப்புண்ய நதிக்கு கங்கையின் மகத்வம் விசேஷமாயிருக்கிறது. இப்புண்யநதீ தீரத்தில் ஸ்ரீ ப்ரத்யங்மங்களம் அதாவது மேல்மங்கலம் என்று அழைக்கப்படுகிற ஓர் புண்யமான க்ராமம் ஒன்று ப்ரகாசிக்கிறது. இந்தக்ராமத்தில் மார்க்கண்டேய மஹரிஷி மீனாக்ஷிசுந்தரேசுவரரால் சர்வபந்தங்களி லிருந்தும் விடுபட்டார். (அவரது பிதாவின் ஆச்ரமம் இந்த கிராமத்துக்கு வடக்கில் சமீபமாய் மிருகண்டு பர்வதத்திலிருக்கிறது. அதில் பரமசிவாலயம், ஸ்ரீ கிருஷ்ணாலயம், ஜ்யொதிராலயம் இவை ப்ரகாசிக்கிறது.) ஸ்ரீ பிருகுமஹரிஷி, ஸ்ரீ மாயாபாண்டேயேசுவரப்ரதிஷ்டையை இந்த கிராமத்தில் செய்திருக்கிறார். ஸ்ரீ தக்ஷிண மூர்த்தியின் சந்நிதானத்தில் பிருகுமஹரிஷியிடமிருந்தும் ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்திரத்தின்

மஹிமையை ஸ்ரீராமர் இந்த கிராமத்தில் உபதேசமடைந்து அறிந்தார் ஸ்ரீ மஹாதேவரும் தனது பூஜையால் திருப்தியடைந்து ப்ரசன்னராய் ஸ்ரீபாசுபதாஸ்திரத்தை சத்ருஹந்தாவான ஸ்ரீராமருக்கு அனுக்ரஹம் செய்தார். பிறகு மனசாகிற வாயுபுத்ரரான ஹநுமாரை வசம்செய்து புத்திமானான ஸ்ரீ ராமர் சிவபூஜையின் மஹிமையால் சம்சாரமாகிற சமுத்ரத்தைத் தாண்டி ஞானகுருவான அகஸ்தியருடைய கிருபையால் துற்குணங்களாகிற ராக்ஷசர்களை சம்ஹரித்தார். அருள்புரியும் தன் ஸ்வரூப லக்ஷ்மியான சீதையை அடைந்து, திரும்ப ஸ்ரீ மஹாவிஷ்ணுவானார். ஸ்ரீ ரங்கநாதனும் பால்சமுத்ரம் ஸ்ரீ பிருகுமஹரிஷி இவர்களுடைய ப்ரியகாரணத்தால் அவர்களது இஷ்டப்படி இங்கு அவதரித்த ஜகன்மாதாவான ஸ்ரீ ரங்கநாயகியை சர்வ லக்ஷ்மீகரமாய் மறுபடி விவாஹம் செய்து கொண்டார். ஸ்ரீயப்பதியான ஸ்ரீரங்கநாதன் பால்சமுத்ரசுகத்தையும் லக்ஷ்யம் செய்யாது யோக நரசிம்மத்தோடும் சபரிவாரமாயும் இந்த க்ராமத்தில் சர்வோத் சிருஷ்டமாய் ப்ரகாசிக்கிறார். பக்தர்களுக்கு மலையேறும் ச்ரமம் கூடாது என்று ஸ்ரீநிவாசனான வேங்கடேசன் ஆஹூய வரதராஜராய் (அதாவது கூப்பிட்டு வரம்கொடுப்பவராய்) இப்பவும் ப்ரசன்னராய் இவ்விடம் ப்ரகாசிக்கிறார். இந்த க்ரந்தம் அவரது ப்ரசாதத்தால்தான் செய்யப்பட்டது. ஆனதால் அவரிடம் என்னையே அர்ப்பணம் செய்தேன் என்பதை இவ்வுலக மறியட்டும்

ஸ்ரீ சாஸ்தா முதலிய சர்வகணபர்களோடும் கணங்களோடும் பட்டாரிகாதேவீ என்ற பட்டாளத்து அம்பிகையுடனும், முக்தாம்பிகை என்ற முத்தாளம்மனுடனும், அங்காளம்மனுடனும், சலாண்டா என்ற செல்லாண்டி அம்மனுடனும் மாதிரு தேவதைகளோடும் வன தேவதைகளோடும் துஷ்ட நிக்ரஹ விஷயத்தில் ஜாகரூகராக இவ்விடம் ஸ்ரீ வீரபத்ரர் ப்ரகாசிக்கிறார். அவ்விதமே ஸ்ரீ காலபைரவும் ப்ரகாசிக்கிறார். இக் கலியிலும் புண்யகார்யத்தைச்செய்ய ஆவல் கொண்டவன், இந்தக்ராமத்தில் செய்யவேண்டும், இவ்விடம் அனுஷ்டிக்கப்படும் வைதிகமான ஆசாராதிகளை, வசிஷ்டாதிகளும் அன்புடன் கவனிக்கிறார்கள், சந்தோஷமடைகிறார்கள். ஏனெனில் சர்வதேவர்களும், சித்தபுருஷர்களும், ஸ்ரீ பிரு

ஹந்நாயகீபதியான பரமசிவனது ஆக்ஞையால் சுப்ரசன்னர்களா யிருக்கிறார்கள். ஆகையால் மேன்மையை விரும்புகிற வர்களால் இந்த புண்யமான கிராமம் தர்சிக்கத் தகுந்தது.

சகோதரர்காள்! பாரதபுத்ரர்காள்! தார்மிகர்காள்! அநேக வித உத்பாதங்களும் உபத்ரவங்களும் உலகிலிருந்து நீங்கவும், பரமபுருஷன் விஜயமாகவும் அவரது ஆக்ஞை அவசியம் செய்யப்படவேண்டும். உண்மையைத் தெரிவித்தேன். அவரது ஆக்ஞா ப்ரகாரம் புண்யமான எங்களது க்ராமத்திலும் மற்றும் புண்யமான க்ராமங்களிலும் புண்யக்ஷேத்ரங்களிலும் அவ்வுத்தம ஆக்ஞை அவசியம் உலகினரால் செய்யப்படவேண்டியது தான், என்று இந்த ப்ரபவருஷ ஆதியிலும் ஸ்வப்பனத்தில் திவ்யபுருஷன்ப்ரசன்னமாய் மறுபடியும் ஆக்ஞையிட்டார். சர்வ அபீஷ்டங்களையும் அனுக்ரஹம் செய்கிற பஞ்சதேவதா ஸ்வரூபியான அந்த திவ்ய மங்கள ஸ்வரூத்தை அனுதினமும் த்யானம் செய்கிறேன். அவ்விதமே சர்வசித்தியின் பொருட்டு அந்த ஆக்ஞாப்ரகாரத்தை தெரிவிக்கிறேன். (323, 324, 325, 326, 327, 328, 329, 330, 331, 332, 333, 334, 335, 336, 337, 338, 339, 340, 341, 342, 343, 344)

மேற் கண்ட ஸ்தல விசேஷங்களில் பஞ்சதேவதா ப்ரதிஷ்டைக்காக பத்மாகாரமாக ஆலயங்கள் நிர்மணமாக வேண்டுமென்று ஆக்ஞாபித்தார். (345)

மங்களம் பொருந்திய அவ்வித ஆலயங்களில் நிருருதி பாகத்தில் ஸ்ரீ மஹா கணபதியையும், ஆக்னேய பாகத்தில் ஆதித்ய பகவானையும், வாயவ்ய பாகத்தில் ஜகதம்பிகையையும் ஈசான்ய பாகத்தில்ஸ்ரீமஹா விஷ்ணுவையும், மத்யபாகத்தில் பரமசிவனையும்

காயத்ரியுடன் சுப்ரம்மண்யத்துடன் தசாவாதாரங்களுடன்: பூஜனீயமான மற்றும் தேவ விசேஷங்களுடன் அஷ்டதிக் பாலர்களுடன் கிரஹ தேவதைகளுடன் மஹனீயர்களான சித்த புருஷர்களுடன் ஆதி பகவத் பாதாசார்யாளுடன்) ஸ்ரீ சாச்வத் ப்ரதிஷ்டை வேதோக்தமாகச் செய்து தினந்தோறும் வைதிகமாய் பூஜைசெய்து சத் ப்ராஹ்மணர்களின் மூலம் உபநிஷத்பாராயணங்களும் வேத பாராயணங்களும் சாஸ்திர பாராயணங்களும் புராண பாராயணங்

களும்: சஹஸ்ர நாமம் சூக்தங்கள் முதலிய பாராயணங்களும் லோக க்ஷேமார்த்தமாக நடத்தச் செய்து மற்றும் அந்தந்த பாஷை களிலுள்ள உத்தம க்ரந்தங்களையும் தேவாரம் திருவாசகம் திரு வாய்மொழி திருப்புகழ் திருக்குறள் தாயுமானவர் பாடல்களையும் அவரவர்கள் மூலம் படிக்கச்செய்து: கான விசேஷங்களும் யோக்ய மாய் நடக்கும்படி செய்து இவ்விதமாய் தார்மிக ஸ்தானங்களும் வித் யாஸ்தானங்களுமாகிய பதினான்கு வித்யா தேவிகளும் வித்யாஸ்தா னங்களாய் மட்டும் ப்ரகாசிக்கிற 4 உபவேத வித்யா தேவிகளும் தங்கள் சகிமார்களான அந்தந்த பாஷா தேவிகளோடு கூட அந்த மஹிமை தங்கிய ஆலயங்களில் ஆநந்த நர்த்தனம் செய்ய ஏற்பாடு செய்து இன்னும் அந்தந்த மூலமந்திரங்களால் 108 ஆஜ்யஹோம மும் 1008 காயத்ரீ மஹா மந்த்ரஹோமமும் சத் ப்ராஹ்மணர்களால் நடத்தச்செய்து தர்சனார்த்தம்வரும் மஹா ஜனங்களுக்கு அந்தந்த ப்ரகாரம் மர்யாதையாய் உபசரிப்புச் செய்து, தவிர சர்வ சமாசாரங் களுக்கும் ஆதாரமான ப்ரணவத்தை இப்புண்ய பூமியின் தவிர சர்வேசுவரரின் மங்களத்வஜமாய் முன்னோர்கள்போல் ஒப்புக்கொ ண்டு ஏற்படுத்தி இவ்விதம் இப்புண்ய பூமியில் சதுபாசனை அவசி யம் நடத்தப்படவேண்டும் இவ்விதம் நடத்தப்பட்டால்தான் தம் தமது தர்மத்தில் புத்தி ப்ரவிருத்திக்குமென்றும் இல்லையேல் இல்லையே, என்றும் ஆக்ஞாபித்து ஸ்வதர்மாசரணம் விது: மேலே தோன்றும் என்று முத்ரா வாக்யத்தை எனக்கு அனுக்ரஹம் செய்து அந்தர்தானமானார். அவ்வித அனுக்ரஹத்தால் இவ்விதம் கிரந்தமூலமாய் பக்தியுடன் என்னால் தெரிவித்துக்கொள்ளப்பட் டது. இதை இவ்வுலகமறிந்து எதைச்செய்ய வேண்டுமோ அதைச் செய்யட்டும். த்ரிகால சம்பந்தமான த்ரிவித துக்கநிவிருத்தியும் நித்யானந்த ப்ராப்தியும் ஸ்வாசாராநுஷ்டானத்தால்தான் கிரமமாய் கிடைக்கும், யார் இந்த கிரந்தத்தைப் படிக்கிறாரோ கேட்கிறாரோ அவ்வுத்தம புருஷன் புத்தித்தெளிவடைந்து ஸ்வோசிததர்மத்தை அனுஷ்டித்து சர்வ சௌபாக்கியங்களையும் கீர்த்தியுடன் அனு பவித்து சநாதன ப்ரஹ்மத்தையே அவசியம் அடைகிறான். (346, 347, 348, 349, 350, 351, 352, 353, 354, 355, 356, 357, 358, 359, 360, 361)

எவனது கோத்ரம் ஆத்ரேயகோத்ரமோ, எவனது தாய் கபட மற்றவளோ, எவனது தந்தை மானிகளுக்குள் மானியோ, மான்யரோ அந்த ஸ்ரீ லக்ஷ்மீபத்மனுபர்கள் தகுமாரனுகிய ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தி சர்மா என்ற நான் ஸ்வதர்மபோதினீ என்ற இவ்வுத்தம க்ரந்தத்தை சிவாக்ஞையால் பக்தியுடன் தெரிவித்து சாதுக்களது, மஹான்க ளது திவ்யபதத்தை சரணமடைகிறேன். (362, 363)

லோக க்ஷேமார்த்தமாய் எனக்கு சர்வசித்திகளும் ஏற்படும் பொருட்டு சர்வசக்திவாய்ந்த சர்வஸ்வரூபியான சர்வேசனை தியா னம் செய்கிறேன். (சிவோம்) (364)

அவ்விதமே சர்வசித்தி ப்ரதமான இக்கார்யம் செய்ய சத் ப்ரக்ஞை சகலருக்கும் உண்டாக மங்கள வசனமும் சர்வேசனை த்யாகித்து, இவ்விதம் மங்களவசனம் சொல்லுகிறேன்.

ब्रह्मैवाहमथों शिवों (365)

ஸ்வதர்ம போதினீயின் த்ராவிட தாத்பர்யமான தத்வதர்சினீ மங்களமாய் முற்றுப் பெற்றது.

தவிர, சர்வசங்டவாரகமான மங்களமான முக்ய அறிவிப்பு.

அழிவற்ற சநாதந தர்மத்தால் ப்ரகாசித்துக் கொண்டிருந்த அவ்விதமே, ப்ரகாசிக்கவேண்டிய, ஹே! அகில பாரதமாத:! அவ் வித பிரஹ்ம ஞானிகளேயும், ஆஸ்திகர்களேயும், தார்மிகர்களேயும், தான தர்ம வ்ரதபரர்களேயும், ஒழுங்கான லௌகிகஞானம் ஒற்றுமை இவைகளுள்ளவர்களேயும், இவ்வித வீரசூரர்களேயும், தீரபராக்ரம சாலிகளேயும் உள்ளபடியான பரமசாந்தர்களேயும் பதிவ்ரதைகளே யும், பெற்றெடுத்த எனது தாயே! ஹே புண்யபூமிதேவியே! உனது சோகம் தீர்ந்து, எப்போதும்போல் நீ ப்ரகாசிக்கவேண்டும்- அப்ப டியே உன் மூலம் சர்வலோகமும் சுகமடையவேண்டும். அதற்காக உனது அருமை குழந்தைகளான தார்மிகர்கள் சங்கடமற்று முன் போல் ப்ரகாசிக்கவேண்டும். இது அநாதிகாலமான தர்மநியாயமா யிருக்க, எல்லாம் சூன்யமாய் அவசியம் நாசமடையும் காலக் கொடுமைகள், தற்காலம் மிக மிக ஒதுங்கியிருக்கும் உனது

புத்ரர்களான சாதுக்களின் மனசை மிக மிக நொந்து போகச் செய்கின்றன. ஆதலால் நினைக்கவே பயங்கரமான மிகமிக உத்பாதங்களும் கஷ்டநஷ்டங்களும் சர்வேசனது கோபத்தால் பஞ்சபூத வ்யாகோபங்களாலும், இன்னும் அநேக ப்ரகாரங்களாலும் மிகமிக சீக்ரம் ஏற்படுமென்று, சூசனைகளால் நன்றாய் தெரிகின்றன. இவ்விதசங்கடங்கள் இவ்வுலகை அதிகம் பாதியாமலிருக்க, சர்வேசன், விஜயானுக்ரஹங்கள் செய்ய, இந்தக்ரந்தத்தில் சொன்னப்ரகாரம் இவ்வுலகம் கட்டாயம் சீர்பட்டாகவேண்டும். தேவபிதிரு ப்ரீதிகரமான விசேஷகார்யங்கள், சாந்திக பௌஷ்டிக கார்யங்கள், அவசியம் செய்தாக வேண்டும். இவ்வித கார்யங்கள் செய்கிறவர்களும், மற்றவர்களும், ஜாதீயமான நடை, உடை, பாவனைகளையும், சிகை புண்ட்ரம் முதலியவைகளையும், விபரீதத்திலிருந்து தங்களை விலக்கிக்கொண்டு, முன்னோர்கள்போல் ஒழுங்கு செய்துகொண்டுதான், க்ஷே[illegible]கரமான கார்யங்களை உலகில் செய்யவேண்டும். வீண்வேதாந்த[illegible]கள் ந்யாயமாகாது. அபிமான கலத்தில் அத்வைதம் மனசா[illegible]ய தர்மங்கள் செய்கையாலும் எண்ணப்படவேண்டும். சக்[illegible]ள ஆஸ்திகர்கள் நமக்கென்ன என்று ஒதுங்கக்கூடாது. அது அனர்த்தம், அது உதவாது. அவசியம் அனுஷ்டிக்கப் படவேண்டும். தந்திமணியார்டர் பண்ணின பணம் நமது முன்னிலையில் ஆபீசரிடம் இருக்கிறது, பெற்றுக்கொண்டேன். சந்தோஷம், என்ற பதிலும், உடனேயே நமக்கு கிடைக்கிறது. இதுபோல் சர்வேசனது ராஜாங்கத்தில் அததற்கு அடையாளங்களும், தனித்தனி டிபார்ட்மெண்டுகளும், அதாவது ஜாதியமுறைகள் சாஸ்திரீயமாய் ஏற்படுத்தியிருக்கிறார். அத்யத்புதமாய்செய்திருக்கிறார். தவிர, சநாதனீயமான, சர்வதேசியமான, சர்வலோகியமான, சர்வதைவிகமான, சர்வேசுவரீயமான, ஏன், ப்ரம்மஸ்வரூபமான, ப்ரணவம் யாவருக்கும் சமமான, மங்களமான, மங்களகரமான, சாச்வதத்வஜம், என்பதையாவரும் மறக்கக்கூடாது. தேவதைகளும், நமது முன்னோர்களும், ஒழுங்காய் தம் தமக்கு ஓர் அத்புத காரணம் பொருந்திய அடையாளத்தை தம்தமது த்வஜமாகக்கொண்ட போதிலும், சர்வசமமான ப்ரணவத்வஜத்துக்குக் கட்டுப்பட்டவர்கள் என்பதை யாவரும் உணரவேண்டும். தவிர, இவ்வுலகில் யாவராயினும் சரி, தம்தமது

யோக்யமான கார்யம் நடைபெறாமல் தாபமடைந்தால், இந்த க்ரந்தத்தில் நான் தெரிவித்துக் கொண்டபடி தன்னை சீர்படுத்திக் கொண்டு, தமது சொத்தின் மதிப்பையும் தனது சமாசாரத்தையும் கபடமன்னியில் எனக்கு, எனக்குப் பிறகு எனது சந்ததிகளுக்கு தெரிவித்தால், எனக்கு உத்தரவாகிற ப்ரகாரம், நான் தெரிவிக்கிறேன். அந்த தர்மத்தை தாமே தமது வாசஸ்தலத்தில் செய்து கொள்ளட்டும், சீக்கிரம் சித்தியாகும். இது சத்யம். என் ப்ரயோஜனம் என்பது, இதன்மூலம் இந்தக்ரந்தரகஸ்யம் பரகாசித்து உலகிற்கு உபகாரமாகிறது என்ற ஒன்றுதான்.

எல்லாம் மங்களம்.

இங்கு சுகமா? அங்கு சுகமா? சர்வவைராக்யம் சுகமா? எது! சுகம், எது? சுககரம்என்று நானென்றும் அறியேன், ஹே! சர்வேச ஹே! ஜகதம்பிகே? ஹே! பரமகுரோ? சரணமடையத் தகுந்த உங்களை தீனனான நான் சரணமடைந்தேன். ஓம். தத். ஸத்.

(மங்களம் பொருந்திய ஹரிசமய திவாகர அச்சுயந்த்ராலய கார்யஸ்தரான ஸ்ரீ ராமானுஜ ஆழ்வார் அவர்களையும் அந்த ஆபீசில் வேலைபார்க்கும் மற்றும் சிறு குழந்தைகள் முதல்யாவரையும் நான் மறக்கவே முடியாது. அவர்களுடைய தார்மிக பக்தி, லௌகிக ஞானம், ஒழுங்கானஒற்றுமை, மர்யாதை இவைகளை ஒருமாசகாலம் கிட்ட இருந்து நான் உள்ளபடி அனுபவித்தவன். ஆனதால் சர்வேசனது கிருபையால் அவர்களுக்கு, இஷ்டசித்தி உண்டாகவேண்டுமென்றும் அவ்விதமே இவ்வுலகில் இவர்கள் போலுள்ள உத்தமர்களுக்கும், இஷ்டசித்தி உண்டாகவேண்டு மென்றும் சர்வேசனை ப்ரார்த்திக்கிறேன்.)

इहामुत्र सुखंवेति परवैराग्यतः प्रभो। (तोंऽबिके) (तोगुरो)
यद्धितं न मयाज्ञातं शरण्यं त्वां गतोऽस्म्यहं ॥
इति शिवं। ஓம் தத் ஸத்.

